இப்போது நீங்கள்  வாங்கும் ஒவ்வொரு

மைசூர் சாண்டல் பேபி சோப்புடனும்

ஓர் அழகிய சோப்புப் பெட்டி இலவசம்*







சந்தன, பாதாம்
எண்ணெய்களால்
வளமாக்கப்பட்ட
மைசூர் சாண்டல்
பேபி சோப்

RECOMMENDED BY
SKIN & CHILD
SPECIALISTS

உங்களைப்
போலவே உங்கள்
பாப்பாவைப்
பராமரிக்கிறது.






சந்தனத்தின் நற்குணத்தை
கடந்த 80 வருடமாக
உங்கள் இல்லத்துக்குக்
கொண்டு வருகிறது
மைசூர் சாண்டல் சோப்.

* சலுகை சரக்குகள் தீரும்வரை மட்டுமே. விரைவீர்!

சுத்தத்திற்கும் சுகாதாரத்திற்கும் மைசூர் சாண்டல் சோப்

A 
ACTIVE

B 
BUZZ BOSS

C 
CADET DX

D 
DEVIL DX

E 
ELEPHANT

F 
FISH

G 
GIRAFFE

H 
HEN

I 
INSECT

J 
JOKER

K 
KIDD DX

L 
LI'L ANGEL
LAMBADA LIMBO

M 
MISSILE MISS INDIA Jr

N 
NEST

O 
ORANGE

P 
PIRANHA

Q 
QUEEN Jr

R 
ROBO COP

S 
SPARKY SALSA

T 
TERMINATOR




V

W

**The largest range of kids bikes**

**HERO CYCLES**

THE ABC OF CYCLING

HTA.5979.2001

சிறப்புப்படைப்பாக மதிமுகம் : 105 மார்ச் : 2002 புன்னகை : 1



இந்தியப் பண்பாடு-வரலாறு 25



பொது நலத்திற்காகவே! 19



மர்மக்குளம் 11



விநாயகர் 45



## பொருளடக்கம்




SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**
***Remittances in favour of Chandmama India Ltd.***
to

Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail : subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**
இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத்தபால் வாயிலாக
பனிரெண்டு இதழ்களுக்கு ரூ 900
இந்தியாவிற்குள் ரூ 120
**புக்போஸ்டில்**
உங்கள் சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணி யார்டரிலோ சந்தமாமா இந்தியா லிமிடெட் என்ற பெயரை எழுதி அனுப்பவும்.



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்கரபாணி

# விவசாயிகளும் வானிலை அறிவிப்புகளும்

உலகின் சில நாடுகளைப் போல இந்தியாவும் செயற்கைக் கோள்களைச் செலுத்தி வானிலை பற்றி அறிந்து அதை மக்களுக்குத் தெரிவித்து வருகிறது. ஆயினும் விவசாயக் குடிமக்கள் மழை, வெயில் பற்றி அறிய இப்போதும் பழங்கால முறைகளையே அதிகமாக நம்புகிறார்கள். அண்மையில் சௌராஷ்டிரப் பகுதி கிராமம் ஒன்றில் ஒரு குடியானவன் இன்ன நாட்களில் தான் மழை பெய்யும் என்றும், அவன் கூறியது முற்றிலும் சரியாக இருந்தது என்றும் ஒரு செய்தி வெளியாகியது. இதை அவன் முன்கூட்டியே குஜரத் வேளாண்மைப் பல்கலைக்கழக விஞ்ஞானிக்கும் எழுதித் தெரிவித்திருந்தானாம். எனவே அந்தக் குடியானவனின் திறமை கண்டு அவர் வியந்தார்.

விவசாயிகள் வானிலை பற்றி பழங்கால முறைகளைக் கையாண்டு அறிந்து கொண்டு தான் வருகிறார்கள். இதைக் கண்ட குஜராத் பல்கலைக் கழக விஞ்ஞானி இந்த முறைகளைப் பற்றி ஆராய 400 விவசாயிகள் கொண்ட ஓர் அமைப்பைத் தோற்றுவித்தார். இதில் வெளிமாநில விவசாயிகள் சிலரும் இருக்கிறார்கள்.

இச்சமயத்தில் 8வது நூற்றாண்டில் வாழ்ந்த வராகமிகிரரும், 12வது நூற்றாண்டில் இருந்த பாதலியும் நம் நினைவிற்கு வருகிறார்கள். இயற்கையில் அவ்வப்போது ஏற்படும் மாறுதல்களைக் கண்டு வானிலை, தட்பவெப்பம் பற்றிக் கூற வழிமுறைகளை வகுத்தனர். மலர்கள் பூப்பதையும், வானின் நிறத்தையும் கொண்டு வானிலையை அறியும் முறைகளை இவர்கள் தம் நூல்களில் கூறி இருக்கிறார்கள்.

உலக வானியல் நாள் மார்ச் 21 அன்று கொண்டாடப்பட இருக்கிறது. இச்சமயத்தில் இந்தியாவின் பழங்காலத்தில் இருந்த திறமைகளையும், தற்போதைய விஞ்ஞான வெற்றிகளையும் நினைத்துக் கொள்வோம்.

---

ஆசிரியர் : **விஸ்வம்**



இந்திய மாவீரர்கள் புதிர்ப் போட்டியில் கலந்து கொண்டு அற்புதமான பரிசுகளை வெல்லுங்கள்

# இந்திய மாவீரர்கள்-6

இந்திய வரலாற்றில் பல போர்களைக் காணலாம். சில போர்களுடன் தொடர்புடைய மாவீரர்களை நீங்கள் அறிவீர்களா?

**முற்றிலும் சரியான விடைகள் கொண்ட மூன்று கூப்பன்களுக்கு சைக்கிள்கள் பரிசளிக்கப்படும்***



1. இந்த மராட்டிய மன்னர் முகலாயர்களைக் கடுமையாக எதிர்த்துப் போர் புரிந்தார். இவரை நயவஞ்சகமாக ஔரங்கசீப் சிறைப்பிடித்தார். ஆனால் இவர் சிறைச் சாலையிலிருந்து தப்பிவிட்டார். இவர் யார்?

---

2. இந்தியாவின் தலைமைப் படைத் தளபதியாயும் இந்தியப் படையின் சேனாதிபதியாயும் 1949 ஜனவரி 15ல் பதவியேற்ற முதல் இந்தியர் யார்?

---

3. வங்க மன்னன் மகிபாலனை இந்த சோழ மன்னன் வென்று அங்கிருந்து கங்கையின் நீரை தன் தலைநகரான கங்கை கொண்ட சோழபுரத்திற்குக் கொண்டு வந்தான். இந்த மன்னன் யார்?

---

4. இவர் இந்திய ராணுவத்தின் முதலாவது ஃபீல்ட் மார்ஷல். இவர் யார்?

---

5. முதலாவது மைசூர் போரில் இவர் வெற்றி பெற்றார். இவருடைய மகனும் இவரைப் போலப் புகழ்பெற்றவரே. இவர் யார்?

---

ஒவ்வொரு வினாவிற்கும் அதன் கீழுள்ள வெற்றிடத்தில் விடையைத் தெளிவாக எழுதவும். இந்த ஐவரில் உங்களுக்கு பிடித்தமான தேசியமாவீரர் யார் என்றும் அதற்கான காரணங்களை பத்து சொற்களில் எழுதவும். எனக்கு மிகவும் பிடித்த தேசிய மாவீரர் ..............................

..............................

..............................

போட்டியாளரின் பெயர்: ..............................

வயது: .................. வகுப்பு: ..............................

முகவரி: ..............................

..............................

பின்கோடு: .................. போன்: ..............................

போட்டியாளரின் கையொப்பம்: ..............................

பெற்றோரின் கையொப்பம்: ..............................

இந்தப் பக்கத்தைக் கத்தரித்துக் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்

**இந்திய மாவீரர்கள் புதிர்ப்போட்டி-6**
**சந்தமாமா இந்தியா லிமிடெட்**
நெ. 82. டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை-600 097
அனுப்ப வேண்டிய கடைசித் தேதி ஏப்ரல் 5, 2002

**நிபந்தனைகள்:**

1. இப்போட்டி 8 முதல் 14 வயதிற்குட்பட்ட சிறார்களுக்கு மட்டுமே.
2. *எல்லா மொழிப்பதிப்புகளின் கூப்பன்களிலிருந்தும் மூன்று பேர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இச்சிறார் களுக்கு அவர்களுக்கு ஏற்ற அளவு சைக்கிள்கள் வழங்கப் படும். முற்றிலும் சரியான விடைகள் கொண்ட பல கூப்பன் கள் இருந்தால், 'எனக்கு மிகவும் பிடித்தமான மாவீரர்' என்ற தலைப்பில் எழுதப்பட்ட வாக்கியங்களில் சிறந்தனவாகத் தேர்ந்தெடுக்கப்படுபவைகளுக்குப் பரிசு அளிக்கப்படும்.
3. நடுவர்களின் தீர்ப்பே இறுதியானது.
4. இப்போட்டி தொடர்பாக எவ்விதக்கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்ளப்படமாட்டாது.
5. வெற்றிபெற்றவர்களுக்குத் தபால் வாயிலாக முடிவுகள் தெரிவிக்கப்படும்.

இப்பரிசுகளை உங்களுக்கு அளிப்பவர்கள்



# வாசகர்களின் கடிதங்கள்

✻ கதைகளுக்கு ஏற்ப ஓவியங்களையும் சேர்த்துப் பிரசுரிப்பதால் சிறுவர் முதல் பெரியவர் வரை ரசித்துப் படிக்கச் செய்வது 'அம்புலிமாமா' தான். கதையைப் படிக்க அதற்கான ஓவியங்களில் காட்டப்படும் பாவனைகள் கண்களைக் கவர்கின்றன. இம்மாதிரி வெளிவரும் 'அம்புலிமாமா'விற்கு நிகர் எதுவுமே இல்லை.

*– மீனாட்சி முருகேசன், ஈரோடு.*



✻ 'அம்புலிமாமா' கதைகளுக்காகப் பெயர் பெற்றது. ஆனால் இப்போது வெளிவரும் இதழ்களில் கதைகள் குறைந்து பொது அறிவு பற்றிய விஷயங்கள் சேர்க்கப்பட்டுள்ளன. இவ்வாறு வெளியிடுவதால் அம்புலிமாமாவின் சிறப்புத் தன்மை குறைந்து விடுமோ என அஞ்சுகிறேன்.

*– ஈசுவர மூர்த்தி, கும்பகோணம்.*

✻ நம் நாட்டின் சில பகுதிகளில் வழக்கத்திலுள்ள பழங்காலக் கதைகள் வரவேற்கத் தக்கது. நம் நாட்டின் பல பகுதிகளின் பழக்க வழக்கங்கள், நடை, உடை, பாவனை ஆகியவை பற்றி இவற்றின் வாயிலாக அறிந்து கொள்கிறோம். இம்முயற்சிக்கு என் பாராட்டுக்கள்.

*– மணிமேகலை, துறையூர்.*

✻ இந்தியப் பண்டிகைகள் பற்றி குறிப்புகள் வெளியிட்டுள்ளதைப் படித்து மகிழ்ந்தேன். அந்தந்தப் பண்டிகைகள் ஏன், எப்படி கொண்டாடப்படுகின்றன என்பது விளக்கிக் கூறப்பட்டுள்ளது.

*– பாக்கியநாதன், மேலூர்.*

✻ 'நம் இந்தியா'வில் கேட்கப்படும் வினாக்கள் அறிவை வளர்ப்பனவாக உள்ளன. வினாக்களுக்கான விடைகளை எழுதி வைத்துக் கொண்டு அடுத்த மாதம் அவற்றிற்கான விடைகள் வெளியிடப்படும்போது சரிபார்த்துக் கொள்கிறோம்.

*– கோமதி நாயகம், அம்பாசமுத்திரம்.*



# எனக்கு என்ன ஆதாயம்?

கோட்டூரில் தங்கப்பன் என்ற வியாபாரி இருந்தான். அவன் மிகவும் பேராசை பிடித்தவன். அவனிடம் நிறையப் பணம் இருந்தாலும் சுய நலம் பிடித்தவன். எதிலும் தனக்கு என்ன ஆதாயம் என்றே பார்ப்பவன். அவனுக்கு சொந்தமான ஒரு வீட்டிற்கு அவ்வூருக்குப் புதிதாக வந்த செல்லப்பன் என்பவன் வாடகை பேசிக் குடிபுகுந்தான்.

ஒரு நாள் தங்கப்பன் தன் கடையில் இருந்து தன் வீட்டிற்கு வந்த போது செல்லப்பனின் மகள் கோமதி வீட்டு வாசலில் இருப்பதைக் கண்டான். அவள் பனிரெண்டு வயதுச் சிறுமி. அவளைப் பார்த்த தங்கப்பன், ''என்ன பெண்ணே! என்ன வேலையாக இங்கு வந்தாய்?'' என்று கேட்டான். கோமதியும், ''தேங்காய் உரிக்க உங்கள் வீட்டிலிருந்து உரிகோலை வாங்கிக் கொண்டு போயிருந்தேன். அதைத் திருப்பிக் கொடுத்துவிட்டு வந்து கொண்டிருக்கிறேன்,'' என்றாள்.

அதைக் கேட்ட தங்கப்பன், ''என் வீட்டு உரிகோலை உங்கள் வீட்டில் பயன்படுத்திக் கொண்டீர்களா? அதற்காக எனக்கு நீ என்ன கொண்டு வந்து கொடுக்கப்போகிறாய்? ஒரு தேங்காயாவது கொண்டு வந்து கொடுக்க வேண்டாமா?'' என்று கேட்டான். உடனே கோமதி ஓடிப் போய்த் தன் வீட்டிலிருந்து ஒரு தேங்காயை எடுத்து வந்து தங்கப்பனிடம் கொடுத்தாள். தங்கப்பனும் ''கெட்டிக்காரப் பெண்!'' என்று கூறி அவளைத் தட்டிக் கொடுத்தான்.

இரண்டு நாட்கள் கழிந்தன. மூன்றாவது நாள் மதிய உணவு உண்ண தங்கப்பன் வந்தபோது தன் வீட்டில் கோமதியைக் கண்டான். அப்போது அவன், ''என்ன பெண்ணே! இன்று என்ன வாங்கிக்

கொண்டு போனாய்?'' என்று கேட்டான். கோமதியும், ''என் அம்மா இரும்பு வாணலியைக் கேட்டு வாங்கிவரச் சொல்லவே, அதை வாங்கிக் கொண்டு போனேன். அதில் எண்ணெய் வைத்து முறுக்கு சுட்டாள். இப்போது வாணலியைக் கொண்டு வந்து கொடுத்தேன். வாணலிக்காக நீங்கள் ஏதாவது கேட்பீர்களே என்று நான்கு முறுக்குகள் கொண்டு வந்திருக்கிறேன்,'' எனக் கூறி முறுக்குகளைக் கொடுத்தாள். அவனும் அவற்றை வாங்கிக் கொண்டு ''நீ மிகவும் நல்லவள். அதனால் நீ என் வீட்டிலிருந்து எதை வாங்கிப் போனாலும் அதைப் பயன்படுத்திவிட்டு அதனால் கிடைக்கும் பொருளை எனக்குக் கொடுத்துக் கொண்டே இரு!'' என்றான். கோமதியும் தலையை ஆட்டினாள்.

நாலைந்து நாட்களுக்குப் பிறகு தங்கப்பன் மதிய உணவு உண்ண வந்த போது தன் வீட்டு வாசலில் கோமதியைக் கண்டான். அவன் அவளிடம், ''இன்று என்ன வாங்கிக் கொண்டு போய் விட்டுத் திருப்பித் தந்தாய்? எனக்கும் ஏதாவது கொண்டு வந்திருப்பாயே!'' என்று கேட்டான். அவளும் சிரித்துக் கொண்டே ''உங்கள் வீட்டிலிருந்து எலிப் பொறியை வாங்கிக் கொண்டு போய் ஐந்து எலிகளைப் பிடித்தோம். நான்கு எலிகளை உங்கள் வீட்டிற்குள் விட்டு விட்டேன். உங்களுக்குக் கொடுக்க வேண்டுமே என்று ஒரு எலியைக் கூண்டோடு கொண்டு வந்திருக்கிறேன். அதைக் பெற்றுக் கொள்ளுங்கள்,'' என்று கூறி கூண்டோடு எலியை அவனிடம் கொடுத்தாள்.

தங்கப்பன் திகைத்துப் போனான். இப்படியும் நடக்குமா என எண்ணி அவன் இனிமேல் யாரிடமும் ஒரு பொருளைக் கொடுத்துத் திரும்பப் பெறும் போது இதனால் என்ன ஆதாயம் என்று கேட்கக்கூடாது என்று தீர்மானித்துக் கொண்டான்.



ORISSA
The soul of India

# சிமிலிபால்

நீங்கள் உல்லாசப் பயணம் போய் அங்கு நூறு புலிகளை ஒரே இடத்தில் காண விரும்பினால் ஒரிஸ்ஸாவிலுள்ள சிமிலிபால் தேசியப் பூங்காவிற்குச் செல்லுங்கள். இது மயூர்பஞ்ச் மாவட்டத்தில் டைகர் பிராஜக்ட் என்ற திட்டத்தின் கீழ் சிமிலிபால் என்ற இடத்தில் அமைக்கப்பட்டது. இதன் பரப்பளவு 2750 சதுர கிலோமீட்டர்.

சிமிலிபால் பலவித நில அமைப்புகளைக் கொண்டது. பலவித மரம் செடிகளை உடையது. இந்தப் பூங்கா வழியே 12 ஆறுகள் ஓடுகின்றன. இங்கு தட்ப நிலை இடத்திற்கு இடம் மாறுகிறது. அதனால் இங்கு விதவிதமான செடி கொடிகளையும் மலர்களையும் காணலாம்.

வன விலங்குகளைக் காண விரும்புவோரின் கண்களுக்கு இங்கு நல்ல விருந்தே உள்ளது. புலிகள், சிறுத்தைகள், யானைகள், முதலைகள், பலவித மலைப் பாம்புகள் எனப் பலப்பல உள்ளன. பறவைகளைக் காண வேண்டுமா? இங்கு 230 வகைப் பறவைகளைக் காணலாம். இங்கு உங்களுக்கு பைனாகுலர்கள் மிகவும் உபயோகமாக இருக்கும்!

இதன் இயற்கைக் காட்சிகளை எப்படித்தான் வர்ணிப்பதோ? மலைகள், பள்ளத்தாக்குகள், நீர்வீழ்ச்சிகள் என்று பல கண்கவர் காட்சிகளைக் காணலாம். பரேஹிபானி நீர்வீழ்ச்சியையும், ஜோரண்டா, சாஹலா, நவானா ஆகிய இடங்களையும் காண தங்கும் வசதிகளும் சிமிலிபால் தேசியப் பூங்காவிலேயே கிடைக்கின்றன.

---

உங்களுக்கான புதிர் வினாக்கள்
(14 வயதிற்குட்பட்டவர்களுக்கு மட்டும்)

## போட்டி – VII

1. இந்தியாவில் எத்தனை புலிப்பாதுகாப்பு இடங்கள் உள்ளன?

-----------------------------------

2. சிமிலிபால் தேசியப் பூங்காவில் முதலைகள் வளர்க்கும் மையம் உள்ளது. அது எங்கு அமைந்துள்ளது?

-----------------------------------

3. கிழக்குத் தொடர்ச்சி மலைப் பகுதியில் மகாநதி பாயும் எந்த இடத்தில் என்ன சரணாலயம் உள்ளது?

-----------------------------------

உங்கள் விடைகளைத் தெளிவாக அவற்றிற்காக விடப்பட்ட இடங்களில் எழுதி இந்தக் கூப்பனைக் கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**Orissa Tourism Quiz Contest**
**Chandamama India Limited**
**No.82, Defence Officers Colony**
**Ekkatuthangal, Chennai - 600 097**

பெயர் : ..........................................

வயது : ..........................................

முகவரி : ..........................................

..........................................

பின்கோடு............ போன் ............




Winners picked by Orissa Tourism in each contest will be eligible for **3 days, 2-night** stay at any of the **OTDC Panthanivas**, upto a maximum of four members of a family. Only original forms will be entertained. The competition is not open to CIL and Orissa Tourism family members. Orissa Tourism, Paryatan Bhaven, Bhubaneswar - 751 014. Ph: (0674) 432177, Fax : (0674) 430887, e-mail : ortour@sancharnet.in. Website : Orissa-tourism.com



# மர்மக் குளம்

வெகு காலத்திற்கு முன் அமராவதி நகர மன்னனின் தர்பாரில் குலசேகரன் என்பவன் பணிபுரிந்து வந்தான். அவனது ஒரே மகன் ஜெயசீலன். சிறு வயதிலேயே தாயை இழந்து விட்ட அவனை குலசேகரன் செல்லம் கொடுத்து வளர்த்து வந்தான். ஜெயசீலனும் நன்கு கற்று போர்க் கலையிலும் நல்ல தேர்ச்சி பெற்று இருபதாவது வயதை அடைந்து விட்டான். அப்போது குலசேகரன் தன் மகனை அரசாங்க வேலையில் சேர்க்க எண்ணினான். மன்னனிடம் அதுபற்றி சரியான சமயத்தில் பேசலாம் என்று எண்ணிக் கொண்டு இருக்கையிலேயே திடீரென அவன் மாரடைப்பால் இறந்துவிட்டான்.

ஜெயசீலன் யாரும் அற்றவனாக ஆகிவிட்டான். அவனுக்கு அறிவுரை கூறுவோர் யாருமே இல்லை. அதனால் அவன் கெட்டவர்களோடு சேர்ந்து தன் தந்தை விட்டுச் சென்ற சொத்தை அழிக்கலானான். சூதாட்டத்தில் அவன் முழுக்கமுழுக்க ஈடுபட்டு விட்டான். அதனால் நான்கே மாதங்களில் அவனது தகப்பனார் விட்டுப் போன சொத்து முழுவதும் கரைந்து விட்டது. முடிவில் அவன் சாப்பாட்டிற்குக் கூட வழி இல்லாமல் திண்டாடலானான். அழுக்கடைந்த ஆடைகளுடன் அவன் ஊருக்குள் நடமாட வெட்கப்பட்டு சூதாட்ட வீட்டினுள்ளேயே அடைந்து கிடந்தான்.

இதைக் கண்ட தேவசர்மா என்ற அவனது நண்பன் ''நண்பா! இப்படியே வருத்தப்பட்டுக் கொண்டிருந்தால் எவ்விதப் பலனும் ஏற்பட்டு விட முடியாது. சூதாட்டம் ஒருவனை பாழாக்கிவிடும் என்பதை நீ இன்னமும் அறிந்து கொள்ளவில்லை போலிருக்கிறது. நீ நன்கு படித்தவன். போர்க் கலைகளில் தேர்ந்தவன்.



எனவே, நீ ஏன் வீணாகக் கவலைப் பட்டுக் கொண்டிருக்க வேண்டும்?'' என்று கூறினான்.

ஜெயசீலனும் கொஞ்ச நேரம் யோசித்துவிட்டு, ''நண்பா! நீ தான் உண்மையான நண்பன். மனம் உடைந்து நிற்கும் நிலையில் நீ எனக்குச் சரியான வழிகாட்டியாக இருக்கிறாய்!'' என்று உள்ளம் நெகிழக் கூறினான். தேவசர்மா அதற்கு பதிலளிக்க ஆரம்பிக்கையில் வெளியே பெருத்த சத்தமும் கூச்சலும் கேட்டது. திடீரென கிருபாணஜித்தன் என்ற படைத் தலைவன் நாலைந்து வீரர்களுடன் அந்த சூதாட்ட வீட்டிற்குள் புகுந்து அங்கிருந்தவர்களைக் கண்மூடித் தனமாகச் சவுக்கால் அடிக்கலானான்.

அதைக் கண்ட ஜெயசீலன், ''ஐயா! இதென்ன அநியாயம்? நீங்கள் இப்படிச் செய்வது சரியா?'' என்று கேட்டான். அதைக் கேட்ட கிருபாணஜித்தன் கடும் குரலில் ''நான் சூதாடிகளிடமிருந்து அறிவுரைகள் பெறத் தேவையில்லை'' எனக் கூறியவாறே ஜெயசீலனையும் சவுக்கால் அடிக்கத் தொடங்கினான். ஜெயசீலனோ முதலாவது சவுக்கடி பட்டதும் தாவிக் குதித்து அருகிலிருந்த ஒரு மூங்கில் கழியை எடுத்து கிருபாணஜித்தனின் தலை மீது பலமாக அடித்தான். அடிபட்ட கிருபாணஜித்தன் 'ஐயோ!' என்று அலறினான். மறுகணம் அவன் தன் வாளை உருவி எடுத்து ஓங்கவே, ஜெயசீலன் அவனது இடுப்பில் பலமாக உதைத்தான்.

கீழே சுருண்டு விழுந்த கிருபாணஜித்தன் வாரி சுருட்டி எழுந்து தன் குதிரையின் மீதேறி அங்கிருந்து தப்பி ஓட முயன்றான். ஆனால் ஜெயசீலன் சட்டெனத் தாவி அதே குதிரை மீது கிருபாணஜித்தனின் பின்னால் உட்கார்ந்து குதிரையின் கடிவாளத்தைப் பற்றிக் கொண்டான்.

பிறகு அவன் கிருபாணஜித்தனைக் குத்திக் கொண்டே இருக்க, குதிரை வேகமாக ஓடி அரண்மனை வாசலில் நின்றது. அப்போது அரண்மனை உப்பரிகையில் மன்னன் தன் அமைச்சருடன் ஏதோ ஒரு விஷயமாக ஆலோசனை நடத்திக் கொண்டிருந்தான். அரண்மனை வாசலில் இருவர் சண்டை போட்டுக் கொண்டிருப்பதைக் கண்டு கோபம் கொண்டு அங்கே நின்ற ஒரு வீரனிடம், ''நடுத் தெருவில் சண்டை போடும் அந்தக் குடிகாரர்கள் இருவரையும் பிடித்து

இழுத்து வா!'' என்று கட்டளை இட்டான்.

அந்த வீரனும் கிருபாணஜித்தனையும் ஜெயசீலனையும் பிடித்துத் தள்ளிக் கொண்டு போய் மன்னன் முன் நிறுத்தினான். மன்னன் தன் குதிரைப் படைத் தலைவனான கிருபாணஜித்தனை அடையாளம் கண்டு கொண்டான். அதனால், ''கிருபாணா! படைத் தலைவனான நீயா நடுத் தெருவில் இந்தக் குடிகாரனுடன் சண்டை போடுகிறாய்? வெட்கமாக இல்லை உனக்கு?'' என்று கேட்டான். கிருபாணஜித்தனும் எதையும் மறைக்காமல் நடந்ததை எல்லாம் கூறினான். அதைக் கேட்ட மன்னன் மேலும் கோபம் கொண்டு ''கிருபாணா! நீ இப்படிப்பட்ட தொடை நடுங்கியா? இதனால் உன்னால் நம் ராணுவத்திற்கே கெட்ட பெரும் அவமானமும் ஏற்பட்டுவிட்டது. எனவே, உன்னை நாடு கடத்த உத்தரவிடுகிறேன். உன் இடை வாளைக் கீழே வைத்துவிட்டுப்போய்விடு!'' என்று உறுமினான்.

கிருபாணஜித்தன் மறுபேச்சு பேசாமல் தன் வாளைக் கீழே வைத்து விட்டு அங்கிருந்து சென்றான். அப்போது மன்னன் பற்களை 'நறநற' வென்று கடித்தவாறே ஜெயசீலனைப் பார்த்து, ''அடே, சூதாடியே! உன் தலையை வெட்டி எறியும்படி தண்டனை விதிக்கிறேன். நீ ஏதாவது சொல்ல விரும்புகிறாயா?'' என்று கேட்டான். அதைக் கேட்ட ஜெயசீலன் சற்றும் பயப்படாமல், ''அரசே!



நீங்கள் என் தலையை வெட்டி எறியும்படிக் கட்டளை இட்டிருக்கிறீர்கள். இதனால் நான் எதைக் கேட்டாலும் எனக்கு எவ்விதப் பயனும் இல்லையே!'' என்று கூறினான்.

அதைக் கேட்ட மன்னன், ''உனக்கு உன் உயிர் போய்விடுமே என்ற அச்சம் இல்லையா?'' எனக் கேட்டான். அவனும், ''நான் பணமில்லாது எவ்வளவோ கஷ்டங்களை அனுபவித்துக் கொண்டிருக்கிறேன். அதனால் என் உயிர் போவது பற்றி நான் கொஞ்சமும் கவலைப்படவில்லை'' என்றான். மன்னனும் ''சூதாட்டம் ஒருவனை இந்த நிலைக்குத் தான் கொண்டு வந்து விட்டுவிடும்'' என்றான். அப்போது அமைச்சர், ''அரசே! இந்த இளைஞன் நமது முன்னாள் ஊழியன் குலசேகரனின் ஒரே மகன். குலசேகரன் இப்போது



உயிருடன் இல்லை. எனவே இவனுக்குக் கொஞ்சம் இரக்கம் காட்டுங்கள்'' என வேண்டினார். மன்னனும், ''சரி, இவனைக் கொல்ல வேண்டாம். இவனை நாடு கடத்தும் படி தண்டனை அளிக்கிறேன்'' என் றான். ஜெயசீலனும் மன்னனை வணங்கி அங்கிருந்து செல்லும்போது மன்னன் ''இதோ பார். கிருபாணஜித் தன் விட்டுப்போன வாளை எடுத்துக் கொள். இன்னும் ஒரு வாரத்துள் நீ என் நாட்டைவிட்டு வெளியேறிவிட வேண்டும்,'' என்று கடுமையாகக் கூறி எச்சரித்தான்.

ஜெயசீலனும் உடனேயே நகரை விட்டு வெளியேறினான். காட்டு வழியே அவன் ஒரு வார காலம் சென்று வேறொரு நாட்டு தலைநக ரின் எல்லையை அடைந்தான். அப் போது மாலைப் பொழுது முடிந்து இரவாகிவிட்டது. அந்த இரவை ஒரு மரத்தடியில் கழிப்பது என எண்ணி சுற்றிலும் பார்த்தான். ஒரு பெரிய ஆலமரம் தென்படவே, அதனடியில் படுத்து அவன் தூங்கலானான். திடீரென்று, ''காப்பாற்றுங்கள்! என் னைக் காப்பாற்றுங்கள்!! மகாகாலன் என்னை விழுங்கப் பார்க்கிறான்'' என்ற உரத்த குரலில் யாரோ கத்தும் சத்தம் கேட்டது.

ஜெயசீலன் வாளை எடுத்துக் கொண்டு எழுந்து, அந்தக் குரல் எழுந்த இடத்தை நோக்கி ஓடினான். அந்த இடம் மயானம். இரண்டு மூன்று பிணங்கள் எரிந்து கொண் டிருந்தன. அந்த வெளிச்சத்தில் தலை விரி கோலத்துடன் கறுப்பான ஆடை களை அணிந்த ஒருவன் அங்குமிங் கும் ஓடி பயந்து கத்திக் கொண்டிருப் பதைக் கண்டான். அவ்வுருவத்தை வெள்ளை ஆடை அணிந்த மற்றொரு உருவம் துரத்திக் கொண்டிருந்தது. அது ''அடே, நில்! மகாகாலனின் ஊழியனான காலகாலனாகிய என் னைக் கண்டு பயப்படும் நீ ஏன் மகா காலனை ஆராதிக்கிறாய்?'' என்று கேட்டது.

ஜெயசீலன் அப்போது காலகாலன் என்று தன்னைக் கூறிக்கொண்ட அந்த உருவத்தின் முன் போய் நின்று, ''அடே! நீயார்? பயந்து ஓடும் ஒருவனை நீ ஏன் துரத்துகிறாய்? அவனை விழுங்கவா போகிறாய்? அதை நான் செய்ய விடமாட்டேன்'' என்றான். அதைக் கேட்ட காலகாலன் பலமாகச் சிரித்து, ''நான் யார் என்றா

கேட்கிறாய்? உண்மையில் நான் யார் என்பதைப் பார்!'' என்று கூறி அது தான் போர்த்தியிருந்த வெள்ளைத் துணியைத் தூக்கி தூர எறிந்தது. அப்போது காலகாலன் பயங்கர உருவில் தென்பட்டான். கறுப்பான உடல். நெருப்புத் தணல் போன்ற கண்கள். வாயிலிருந்து அக்கினி ஜ்வாலை கிளம்பிக் கொண்டிருந்தது. அவனது குரலோ சிம்ம கர்ஜனை போல இருந்தது.

ஜெயசீலன் அந்த பயங்கர உருவத்தைக் கண்டு பயப்படவில்லை. அவன் தன் வாளை காலகாலனின் மார்பிற்கு நேராக நீட்டி, ''அடே! உன்னைப் பார்த்து நான் பயந்து போய் விடுவேன் என்றா நினைத்தாய்? பயந்து நடுங்கும் ஒருவனைக் கொல்ல முயலும் நீ எப்படிப்பட்ட சூரப்புலி என்பது தெரிகிறது,'' என்றான்.

ஜெயசீலன் வாளைக் காலகாலனுக்கு நேராகப் பிடித்தவாறே அங்கே இன்னும் வேறு யாராவது இருக்கிறார்களா என்று சுற்றிலும் பார்த்தான். அப்போது காலகாலன் அந்த வாளை ஒரு பக்கமாகத் தள்ளியவாறே துள்ளிக் குதித்தான். ஜெயசீலன் அவனது கழுத்திற்குக் குறிவைத்து வாளை வீசினான். அந்த வாள் காலகாலனின் தலையை வெட்டி உடலிலிருந்து சற்று தூரத்தில் விழ வைத்தது. ஆனால் தரையில் விழுந்த தலை பந்து போல எம்பி 'கடகட'வென்ற சிரித்து, ''ஜெயசீலா! உண்மையிலேயே நீமாவீரன் தான். உன் வாளில் என் ரத்தம் பட்டு



விட்டது. அதனால் அதற்கு அபூர்வ சக்தி கிடைத்து விட்டது. அதை எடுத்துக் கொண்டு போ! அதன் உதவியால் நீ எதை விரும்பினாலும் முயன்று அதனை அடைந்துவிடுவாய்!'' என்றது.

ஜெயசீலன் அதைக் கேட்டு தன் வாளை உறைக்குள் போட்டுக் கொண்டு தான் படுத்திருந்த ஆல மரத்தடிக்கே சென்றான்.

அந்த மரத்தின் மீதிருந்த ஆந்தைகள் அலறின. சற்று தூரத்தில் நரிகள் ஊளையிட்டுக் கொண்டிருந்தன. இதனால் ஜெயசீலனால் தூங்க முடியவில்லை. மேலும் அவனுக்குத் தாகம் எடுத்தது. இரவு வெகுநேரமாகிவிட்டது. எங்காவது குளம் இருக்கிறதா என்று தேடிப் பார்க்க வேண்டும். அது கிடைத்ததும் முதலில் தாகத்தைத் தீர்த்துக் கொண்டு பிறகு விடிந்ததும்



அதில் குளித்துவிட்டு நகருக்குள் செல்ல வேண்டுமென்று எண்ணிக் கொண்டான்.

இப்படி நினைத்தவாறே அவன் அங்கிருந்து கிளம்பினான். சற்று நேரத்தில் அந்த பயங்கர மயானத்தைத் தாண்டிச் சென்றபோது ஓரிடத்தில் ஒரு சிறிய வீட்டைக் கண்டான். அவ்வீட்டு ஜன்னல் வழியாக ஒரு விளக்கின் ஒளி வந்து கொண்டிருந்தது. முதலில் தாகத்தைத் தணித்துக் கொள்ள விரும்பிய அவன், அவ்வீட்டின் வாசலை அடைந்து கதவைத் தட்டினான். இரண்டொரு நிமிடங்களுக்குப் பின் கையில் விளக்கை எடுத்துக் கொண்டு வந்த ஒரு கிழவி கதவைத் திறந்தாள். ''யாரப்பா? இந்த அகாலத்தில் வந்து கதவைத் தட்டுவது?'' என அவள் கேட்கவே, ஜெயசீலனும், ''அம்மா! நான் நெடுந்தூரம் செல்லும் பயணி. எனக்கு தாகமாக இருக்கிறது. குடிக்கக் கொஞ்சம் தண்ணீர் கொடுப்பீர்களா?'' என்று கேட்டான்.

கிழவியும் ''உள்ளே வா! தாராளமாய்த் தண்ணீர் கொடுக்கிறேன்,'' எனக் கூற, அவனும் அந்த வீட்டிற்குள் சென்றான். கிழவி தண்ணீர் கொண்டு வந்து கொடுக்க அதைக் குடித்துவிட்டு, ''அம்மா! வீட்டில் வேறு யாரும் இல்லையா? நீங்கள் தனியாகவா இருக்கிறீர்கள்?'' என்று கேட்டான். அவள் ''யாரும் இல்லையப்பா! என் கணவர் சென்ற ஆண்டில் இறந்து போனார். எனக்குக் குழந்தையே பிறக்கவில்லை. என் கணவர் அரசாங்க ஊழியர். அதனால் அவரது மரணத்திற்குப் பின் மன்னர் என் பராமரிப்பிற்காக மாதா மாதம் பணம் கொடுக்கிறார்,'' என்றாள்.

ஜெயசீலனும், ''அப்படியா? ரொம்ப சந்தோஷம். நான் இந்த நாட்டிற்குப் புதியவன். இதன் மன்னர் யார்? சற்றுத் தொலைவில் தென்படும் நகரத்தின் பெயர் என்ன?'' என்று கேட்டான். கிழவியும், ''அந்த நகரத்தின் பெயர் ஹிரண்யபுரம். இந்நாட்டு மன்னரின் பெயர் கனகாட்சன். மக்கள் நலனைக் கருதி ஆட்சி புரிபவர். நேர்மையானவர். ஆனால் திருமணத்திற்குத் தயாராக இருந்த அவரது மகளையும், இளவரசுப் பட்டம் கட்டிக் கொள்ள வேண்டிய அவரது மகனையும் யாரோ கடத்திக் கொண்டு போய்விட்டார்கள். அன்றிலிருந்து மன்னர் படுத்த படுக்கையாகக் கிடக்கிறார்,'' என்றாள்.

அதைக் கேட்ட ஜெயசீலன், 'இந்த நிலையில் நான் மன்னனைக் கண்டு உத்தியோகம் கொடுங்கள் என்று எப்படிக் கேட்க முடியும்? ஒன்று செய்யலாம். மன்னனுக்கு உதவ அவனது மகனும் மகளும் எங்கே இருக்கிறார்கள் என்றுதேடிக் கண்டுபிடிப்பதாகக் கூறி அவனது ஆதரவைப் பெறலாம். அதை முதலில் செய்கிறேன்' என்று எண்ணி, அக்கிழவியிடம் ''மன்னனுடைய மகளையும் மகனையும் யாராவது வேற்று நாட்டு மன்னன் தான் பகைமை காரணமாகக் கவர்ந்து சென்றிருக்க வேண்டும்'' என்றான்.

கிழவியும் ''யாராவது மன்னன் தான் இதைச் செய்தான் என்றால் கனகாட்சனால் அவனோடு போர் புரிந்து அவர்களை மீட்டு வரமுடியும். ஆனால் ஒரு ராட்சஸனோ அல்லது யட்சனோ அவர்களைக் கொண்டு போயிருந்தால் அவனை எப்படி வெல்வது?'' என்று கேட்டாள். அப்போது அந்த வீட்டு வாசலின் முன் பலத்த கூச்சல் கேட்டது. ஒரு குரல் ''நான் என் கண்ணால் பார்த்தேன். என் தந்தையின் தலையை மயானத்தில் வெட்டிப் போட்டவன் இந்த வீட்டிற்குள் தான் நுழைந்தான். இந்த வீட்டிலுள்ள கிழவியிடம் விசாரித்தால் ஏதாவது தெரிந்து கொள்ளலாம்,'' என்றது. அப்போது இன்னொரு குரல், ''இறந்தவன் மீண்டும் எப்படி உயிர்பெற்றான் என்பது பற்றி விசாரிக்க அமைச்சர் என்னை நியமித்திருக்கிறார். எனவே எதை எதையோ கூறி விஷயத்தைக் குழப்பாதீர்கள்,'' என்று கடுமையாகக் கூறியது.

அதை எல்லாம் கேட்ட ஜெயசீலன் கிழவியிடம், ''அம்மா! என்னைப் பிடிக்க அரசாங்க வீரர்கள் வந்திருக்கிறார்கள் போலிருக்கிறது. அதனால் நான் பின்புற வாசல் வழியாக இங்கிருந்து போய்விடுகிறேன்,'' என்றான். அப்போது வாசல் கதவு பலமாகத் தட்டப்பட்டது. ஒரு குரல் அதிகாரத் தோரணையில், ''யாரது உள்ளே? கதவைத் திற!'' என்று மிரட்டியது.

*(தொடரும்)*



# கௌரவப்பிரச்சினை

கந்தர்வக்கோட்டை மன்னன் தன் அண்டைநாட்டு மன்னனுடன் போர் புரிந்துகொண்டிருந்தான். ஒரு சிறு படை முன்னேறிக்கொண்டிருந்தவழியில் ஒரு பெரிய பாறாங்கல் குறுக்கே கிடந்தது. அதை நகர்த்தப்படைவீரர்கள் பெரும் முயற்சி செய்தனர். ஆனால் அது கொஞ்சம் கூட நகரவில்லை. அப்போது அப்படைத்தலைவன் பாதையோரத்தில் நின்றான்.

அப்போது அவ்வழியே குதிரை மீது அமர்ந்து ஒருவன் வந்து கொண் டிருந்தான். அவன் அங்கு நடப்பதைப் பார்த்து ஓரமாக நின்ற படைத் தலைவனிடம், ''நீயும் அந்த வீரர்களோடு சோந்து கல்லை நகர்த்தினால் வேலை முடிந்துவிடுமே!'' என்றான். அதற்கு அப்படைத் தலைவன், ''நான் படைத் தலைவன். நானும் என் வீரர்களோடு சேர்ந்து வேலை செய்தால் என் கௌரவம் என்ன ஆவது?'' என்று இறுமாப்புடன் கூறினான்.

அதைக்கேட்டு, வந்த மனிதன் குதிரை மீதிருந்து இறங்கி பாறாங்கல்லை தள்ளும் வீரர்களோடு சேர்ந்து அந்தக் கல்லைத் தள்ளினான். புதிதாக வந்தவன் படைத் தலைவனிடம், ''இன்னொரு முறை இந்த மாதிரி செய்யவேண்டி வந்தால் உன் சேனாதிபதியான வீரய்ய நாயக்கனுக்குத் தகவல்கொடு,'' எனக் கூறியவாறே தன் குதிரை மீது அமர்ந்து சென்றான்.

அப்போது தான் படைத் தலைவனுக்கும் அவனது வீரர்களுக்கும் குதிரை மீது வந்தவர் சேனாதிபதி என்பது தெரிந்தது.



நவீன
வேதாளக்
கதை

# பொது நலத்திற்காகவே!

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான்.

பின்னர் கீழே இறங்கி அதைச் சுமந்துகொண்டு அவன் மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து, ''மன்னனே! பயங்கரமான இந்த நடுநிசியில் பல சிரமங்களுக்கிடையே நீ யாருக்காக இப்படிக் கடும் முயற்சியைச் செய்கிறாய்? உன்



முயற்சியில் சரியான பலன் கிட்டா விட்டால் உன் பெயர்தானே கெடும்? இதை விளக்க சுந்தரகவி என்ற ஒரு கவிஞரைப் பற்றிக் கூறுகிறேன். கவனமாகக் கேள்!'' என்று கூறிக் கதை சொல்லலாயிற்று.

சிவபுரி என்ற ஊரில் சுந்தரகவி என்ற இளம் கவிஞன் இருந்தான். அவன் மனிதர்கள், பறவைகள், மிருகங்கள், கண்ணில் தென்படும் பொருள்கள் என எல்லாவற்றைப் பற்றிக் கவிதைகள் புனைந்து வந்தான். அவ்வூர் மக்கள் அவற்றை வெகுவாக ரசித்து அவனுக்குத் தம்மால் ஆன பணத்தை அவ்வப்போது கொடுத்து வந்தார்கள்.

இவ்வாறு சேரும் பணத்தைக் கொண்டு தான் வசிக்க ஒரு பெரிய வீட்டையும், பல நெல் வயல்களை யும் வாங்கிப் போட்டு அவன் சுகமாக வாழ்ந்து வந்தான்.

அவன் ஒரு பெண்ணை மணந்து கொண்டு இல்லற வாழ்வு வாழ நினைத்தபோது அப்பகுதியில் கடும் பஞ்சம் பரவியது.

அப்பஞ்சத்திற்குக் காரணம் இரண்டு வருடங்களைத் தொடர்ந்து மழையே பெய்யவில்லை. அதனால் சிவபுரி மக்கள் வேறு ஊர்களுக்குப் போய்விட எண்ணினார்கள். ஆனால் எங்கு போவது என்று திகைத்தார்கள்.

மேலும் அவர்களால் சுந்தரகவி யின் கவிதைகளை ஒரு நாளாவது கேட்காமல் இருக்க முடியவில்லை. மக்கள் படும் அவதியைக் கண்ட சுந்தரகவி கிராம அதிகாரியிடம், ''நீங்கள் இந்த கிராமத்தின் நிலையை விளக்கி மன்னரிடம் இருந்து உதவி பெற முயலுங்களேன்!'' எனக் கூறவே, அவரும் ''மன்னருக்கு இதுபற்றி எவ்வளவோ முறைகள் எழுதினேன். ஆனால் அவரிட மிருந்து எவ்வித பதிலும் கிடைக்க வில்லை'' என்றார்.

அப்போது சுந்தரகவி ''இந்த ஊரில் இரண்டாயிரம் பேர்கள் இருக் கிறார்கள். அவர்கள் தினமும் என் கவிதைகளைக் கேட்டு எனக்குப் பணம் கொடுத்துக் கொண்டே வருகிறார்கள். அதனால் தான் நான் பணக்காரனாக இருக்கிறேன். நம் கிராம மக்களுக்காக தினமும் நான் இரண்டாயிரம் வராகன் கொடுக் கிறேன். அவர்கள் இந்த ஊரைவிட்டு வேறு எங்கும் போக வேண்டாம்.

நானும் எப்போதும் போல் என் கவிதைகளைக் கூறி அவர்களை மகிழ்விக்கிறேன்'' என்றான்.

கிராம அதிகாரியோ, ''இப்படி எவ்வளவு நாட்களுக்கு உங்களால் பணத்தைக் கொடுக்க முடியும்? அரசாங்கம் செய்ய வேண்டியதை நம்மால் செய்ய முடியாது. எனவே, மன்னரை நீங்கள் நேரில் கண்டு இங்குள்ள மக்களின் பரிதாப நிலையைக் கவிதைகளால் அவரிடம் கூறினால் அவர் மனம் இரங்கி, உடனே நம் கிராமத்திற்கு வேண்டிய உதவிகளைச் செய்வார்'' என்றார்.

சுந்தரகவியும் சிவபுரி மக்களின் அவலநிலை பற்றிக் கவிதைகள் எழுதி எடுத்துக் கொண்டு தலைநகருக்குச் சென்றான். வழியில் கண்ட இயற்கைக் காட்சிகளைப் பற்றியும் கவிதைகள் எழுதிக் கொண்டும் சென்றான்.

அவன் மன்னனின் தர்பாருக்குள் செல்ல முதலில் வாயில் காப்பவர்கள் தடுத்த போதிலும் அவன் தான் ஒரு கவிஞன் என்றும், தான் கூறுவது அப்படியே பலிக்கும் என்றும், அவர்கள் தன் வசைக் கவிதைகளைக் கேட்கத் தயாரா என்றும் மிரட்டவே, அவர்கள் பயந்துபோய் அவனை உள்ளே அழைத்துப் போய் மன்னன் முன் நிறுத்தி, ''இவர் மாபெரும் கவிஞர். தங்களைக் காண வந்திருக்கிறார்,'' என்று கூறி வணங்கினார்கள்.

மன்னனும் சுந்தரகவியை அன்புடன் வரவேற்று மரியாதை செய்தான். பிறகு அவன் சுந்தரகவியிடம்



அவனது படைப்புகளை வாசிக்கும் படிக் கூறவே, சுந்தரகவியும் தான் சிவபுரி மக்களின் அவலநிலை பற்றி எழுதிய கவிதைகளை வாசித்துக் காட்டினான். அவற்றைக் கேட்ட மன்னனின் கண்களிலும், தர்பாரில் உள்ளவர்களின் கண்களிலும் நீர் நிரம்பிவிட்டது.

மன்னன் உடனே தன் அமைச்சரிடம், ''சிவபுரி மக்களின் துயர் துடைக்க உடனே எல்லா ஏற்பாடுகளையும் செய்யுங்கள்!'' என்றான்.

பிறகு அவன் சுந்தரகவியிடம் ''கவிஞரே! உங்கள் சிவபுரி போலப் பஞ்சத்தில் பரிதவிக்கும் பல ஊர்களும் இருக்கலாம். அவை யாவை எனக் கண்டுகொண்டு அங்குள்ள மக்களின் துயரையும் துடைக்கிறேன். உங்கள் கவிதைகள் என் மனதைக்




கரைத்துவிட்டன'' என்றான்.

அதைக் கேட்ட சுந்தரகவி உற்சாகத்துடன் தான் வரும்வழியில் கண்ட இயற்கைக் காட்சிகளை வர்ணித்து எழுதிய கவிதைகளை மன்னனுக்குப் படித்துக் காட்டினான். மன்னனும் தர்பாரில் உள்ளவர்களும் அவற்றை வெகுவாக ரசித்து ''ஆஹா! பேஷ், பேஷ்!!'' என்று கூறிக் கைதட்டி ஆர்ப்பரித்தார்கள்.

மன்னனும், ''கவிஞரே! உங்களை என் ஆஸ்தான கவிஞராக நியமிக்கிறேன். என் தர்பாரிலேயே இருந்துவிடுங்கள்'' என்றான்.

சுந்தரகவியும், ''அரசே! இது பற்றி...'' என ஏதோ கூற முயன்றபோது தர்பாருக்கு வந்திருந்த சிவபுரி கிராமஅதிகாரி எழுந்து, ''அரசே! என் ஊர்க்காரர்கள் சுந்தரகவியைப் பிரிந்து ஒரு நிமிடம் கூட இருக்க மாட்டார்கள். இவரது கவிதைகளைக் கேட்கக் கூட்டமாக வருகிறார்கள். அவற்றைக் கேட்டு ரசித்து இவருக்குப் பணமும் கொடுக்கிறார்கள். பணத்தட்டுப்பாடு என்பது இவருக்கு என்றுமே இருந்ததில்லை. எனவே, இவரை எங்கள் ஊருக்கே அனுப்புங்கள். இவருக்கும் எம் ஊரைவிட்டு இங்கே வர மனம் வராது'' என்றார்.

மன்னன் கவிஞரைப் பார்க்கவே, அவனும் ''நான் என்ன சிரஞ்சீவியா? நான் இல்லாத இந்த சில நாட்களிலும் சிவபுரி மக்கள் எப்போதும் போல வாழ்ந்து கொண்டுதானே இருக்கிறார்கள். அதுபோலவே இனியும் அவர்களால் இருந்துவிட முடியும். எனவே, நான் இங்கேயே சமஸ்தான கவிஞனாக இருந்து

விடுகிறேன். அவ்வப்போது சிவ புரிக்கும் போய் அவ்வூராரை என் கவிதைகளால் மகிழ்வித்து வருகி றேன்,'' என்றான்.

வேதாளம் இக்கதையைக் கூறி, ''மன்னனே! சிவபுரி மக்கள் சுந்தரகவி மேல் பாசம் கொண்டு, பணமும் கொடுத்து, அவனை அவ்வூரில் சுகமாக வாழ வைத்தார்களே! அவ னும் தினமும் தன் கவிதைகளை அவர்கள் கேட்கக் கூறி யாவரையும் மகிழ்வித்தான். அவர்கள் கொடுத்த பணத்தால் வீடும் வயல்களும் வாங் கிப் போட்டு சுகமாக வாழ்ந்தானே! அப்படி இருக்க, அவன் அந்த ஊருக்குப் போகாமல் ஏன் ஆஸ்தான கவிஞர் பதவியை ஏற்று தர்பாரில் இருந்து விட்டான்? இக்கேள்விக்குச் சரியான விடை தெரிந்தும் நீ கூறா விட்டால் உன் தலை வெடித்துச் சுக்குநூறாகி விடும்,'' என்றது.

விக்கிரமனும், ''சுந்தரகவி சிவபுரி வாசிகளின் மீது கொண்டிருந்த பாசத்தால் தான் மன்னனைக் கண்டு அந்த கிராமத்தின் அவலநிலையை கவிதைகளால் அறிவித்தான். அக் கவிதைகள் மன்னனின் மனதைக் கரைய வைத்து, சிவபுரி மக்களுக்கு உதவச் செய்ததோடு அதே நிலையில் உள்ள மற்ற பல ஊர்களுக்கும் உதவி கிடைக்கச் செய்தன. இதனால் தன் னால் நாட்டு மக்களுக்கு நற்பணி புரிய முடியும் என அவன் கண்டு கொண்டான். சிவ புரிக்குப் போனால் அவ்வூராரின் பாராட்டு கிட்டும், பணமும் கிடைக்கும். அதை அடை வது சுயநலமாகும் என நினைத்தே அரச சபையில் இருந்து நாட்டின் நிலைமையை மன்னனுக்குக் கவிதை கள் வாயிலாகக் கூறி, நாட்டு மக்க ளுக்கு நன்மை புரிவதே மேல் என கருதி அப்பதவியை ஏற்றான். இது பொதுநலனிற்கான நற்செயல். எனவே சுந்தரகவி செய்தது சரியே!'' என்றான்.

விக்கிரமனின் இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே, அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பி மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# நம் இந்தியா

## வினாக்கள்

இந்தியக் கலாச்சாரமும் பண்பாடும் ஹிந்துக்களின் புராணங்களை அடிப்படையாகக் கொண்டவை எனக் கூறுகிறார்கள். குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை யாவரும் நம் நாட்டில் இராமாயணத்தையும் மகாபாரதத்தையும் அறிந்தவர்களே. பலர் பதினெட்டு புராணக் கதைகளையும் தெரிந்தவர்கள். இம்மாத வினாக்கள் இப்புராணங்களிலிருந்து கேட்கப் படுகின்றன. உங்களுக்கு இவற்றின் விடைகள் எவ்வளவு தெரியும் என்று பாருங்கள்.

1. ஒரு கூட்டத்தவர் உண்ணாமல் உறங்காமல் கடுந்தவம் புரிந்திருக்கிறார்கள். அக்கூட்டத்தவர் யாவர்?
2. இமயவனின் மகள் யார்? மலையோடு தொடர்பு கொண்ட அவளது இரு பெயர்கள் என்ன?
3. ஒரு முனிவர் தம் மனைவியைச் சபிக்கவே அவள் கல்லாகிவிட்டாள். ஒரு அவதார புருஷரின் கால் பட்டு அவள் அச்சாபத்திலிருந்து விடுதலை பெற்றாள். அவள் யார்? அந்த முனிவர் யார்? அந்த அவதாரப் புருஷர் யார்?
4. பாற்கடலைக் கடைந்தபோது அதிலிருந்து பல பொருள்களும் ஜீவராசிகளும் வெளிவந்தன. அவற்றில் ஒன்று ஒரு யானை. அது தேவேந்திரனின் வாகனமாகியது. அந்த யானையின் பெயர் என்ன?
5. ஸ்ரீ கிருஷ்ணரின் தாய்மாமனும், மதுராபுரியின் மன்னனுமான கம்சனின் தந்தை யார்?
6. நாகர்கள் மனிதமுகத்தையும், பாம்பின் வாலையும் கொண்டவர்கள். ஒரு நாகன் நள மகாராஜாவால் நெருப்பிலிருந்து காப்பாற்றப்பட்டான். அந்த நாகன் யார்?
7. அவளது கணவர் பிறவிக் குருடர். அதனால் அவள் எதையும் பார்த்து மகிழக்கூடாதென்று தன் கண்களைத் துணியால் இறுகக் கட்டிக் கொண்டாள். அவள் யார்?
8. ராமரும் சீதையும் லட்சுமணனும் எந்தக் காட்டில் இருந்தபோது ராவணன் சீதையைக் கவர்ந்து சென்றான்?

*(விடைகள் அடுத்த மாதம்)*

## பிப்ரவரி மாத வினாக்களின் விடைகள்

1. அருணாசலப் பிரதேசம்.
2. மத்தியப் பிரதேசம்.
3. மணிப்பூர்.
4. பீஹார் – புத்த 'விஹாரங்கள்' என்ற சொல்லிலிருந்து.
5. சிம்லா, இமாசலப் பிரதேசம்.
6. கேரளா.
7. சண்டிகட் – பஞ்சாபிற்கும் ஹரியானாவிற்கும் தலைநகர்.
8. உத்தரப் பிரதேசம் – ஹரித்துவார், அலகாபாத்.

# பாரதப் பண்பாடு- வரலாறு

ஒரு உயரிய நாகரீகத்தின் நிகழ்ச்சிகள்.
பரம்பரை பரம்பரையாக உண்மையைக் காண ஆய்வு

## 25. வருங்காலத்தை நோக்கும் விதம்



டீர்களா? வர
ா இந்த ஒன்பது
ரே ...
ற்றை ஏற்க
ாக மக்கள்
தன் என்ற
விட்டதால்
ராக்கிரமச்
த்திக் கூறி
பேரறிஞர்
ம்மன்னன்
ினார்கள்''

சேகரும், சியாமளாவும் அவர் களது நண்பர்களும் மன்னன் விக்கிரமாதித்தனுடைய பராக்கிர மத்தை வியந்து பேசிக் கொண்டிருந் தார்கள். ''ஆகா! அந்த மன்னர் நவ மணிகள் எனப் போற்றப்படும் ஒன் பது அறிஞர்களைத் தன் அவையில் நியமித்தாரே! அந்த ஒன்பது பேர் களில் மகாகவி காளிதாசரும் ஒருவர். இவர்களை எல்லாம் தேர்ந்தெடுத்த அந்த மன்னரும் சிறந்த அறிவாளி யாகத் தான் இருக்க வேண்டும்,'' என்றாள் சியாமளா.

அதைக் கேட்ட சோமநாதர் சிரித்த வாறே ''அன்று நான் சொன்னதை நீங்கள் மறந்துவிட் லாற்று வல்லுநர்களே பேரறிஞர்களும் வாழ்ந்தார்கள் என்ற கூ வில்லை. நெடுங்காலம மனதில் விக்கிரமாதித் பெயர் ஆழப் பதிந்து அவனது வீரதீர செயல்களை மிகைப்ப னார்கள். எனவே ஒன்பது களை நவமணிகள் என நியமித்ததாகவும் கூ என்றார்.

– பாரதீயன் –



அப்போது சியாமளா, ''தாத்தா! விக்கிரமாதித்தர் என்ற மன்னர் முதலாவது நூற்றாண்டில் தானே இருந்தார்?'' என்று கேட்டாள். சோமநாரும், ''ஆம்! அது சரிதான். அச்சமயத்தில் அவர் சக்திவாய்ந்த புகழ் பெற்ற மன்னராகத்தான் இருந்திருக்க வேண்டும். அவர் பெயரில் விக்கிர சகாப்தம் என்பது ஆரம்பிக்கப் பட்டு இன்றும் இந்தியாவின் பல பகுதிகளில் அனுசரிக்கப்படுகிறது. கிறிஸ்து ஆண்டைவிட ஐம்பத்தெட்டு ஆண்டுகள் அதிகமானது விக்கிரம ஆண்டு'' என்றார். உடனே சியாமளா ''அது சரி. விக்கிரம மன்னனும் வேதாளமும் என்ற கதைகளை யார் எழுதினார்கள்?'' என்று கேட்டாள்.

சோமநாதரும், ''அவற்றை யார் எழுதினார்கள் என்று யாராலும் திட்டவட்டமாகக் கூறமுடியாது. விக்கிரமன் சட்டென எதையும் புரிந்துகொண்டு செயல்பட்ட சிறந்த அறிவாளியாக இருந்திருக்கலாம். அவன் வழக்குகளில் அளித்த தீர்ப்புகள் நியாயம் தவறாமல் இருந்தது கண்டு யாவரும் வியந்து பாராட்டினார்கள். அதனால் அவனால் எந்தச் சிக்கலான பிரச்சினைக்கும் தீர்வு காண முடியும் என்ற நம்பிக்கை ஏற்பட்டு வேதாளம் கேட்ட சிக்கலான கேள்விகளுக்கு அவன் சரியான விடைகள் கூறியதாக எண்ணிவிட்டார்கள். இப்படியாக வேதாளக் கதைகள் இருபத்தைந்து மக்களிடையே பரவிவிட்டன.'' என்றார்.

அப்போது சேகரின் நண்பன் ''நீங்கள் ஒரு வேதாளக் கதை சொல்கிறீர்களா?'' என்று கேட்டான். சோமநாதரும் ''ஆகா...! சொல்கிறேன்,'' என்று சொல்லிக் கதையை ஆரம்பித்தார்.

வெகுநாட்களுக்கு முன் தவளன் என்ற இளைஞன் இருந்தான். அவன் சிறுவனாக இருக்கையில் ஒரு யோகியால் கவரப்படவே தானும் அவரைப் போல ஒரு யோகி ஆகிவிடலாம் என்று அவன் மனக்கோட்டை கட்டினான். ஆனால் அவனால் யோகியாக முடியவில்லை. ஏனெனில் அவனது பெற்றோர் கட்டாயப்படுத்தி அவனுக்குத் திருமணம் செய்து வைத்துவிட்டார்கள். அவனது மனைவி அழகான பெண். அதனால் அவன் திருப்தி அடைந்



தான். ஒருநாள் அந்தப் பெண்ணின் அண்ணன் தவளனின் வீட்டிற்கு வந்து தன் தங்கையையும் தவளனையும் தன் வீட்டில் நடக்கும் பண்டிகைக்கு அழைத்துச் சென்றான். மூவரும் ஒரு காட்டு வழியே சென்று கொண்டிருந்தனர். அப்போது மூவரும் ஒரு மரத்தடியே உட்கார்ந்தனர்.

தவளன் சற்று தூரத்தில் ஒரு பாழடைந்த கோயில் இருப்பதைக் கண்டு அதைப் பார்க்கச் சென்றான். அங்கு காளிதேவியின் விக்கிரகம் இருந்தது. மயான அமைதி நிலவியது. அப்போது அவனுக்கு ஒரு விசித்திர யோசனை தோன்றியது. தான் காளிதேவிக்கு பலியானால் தான் ஒரு யோகியாக முடியும் என்பதே அது. அதனால் காளி விக்கிரகத்தின் கையிலிருந்த வாளை எடுத்துத் தன் தலையை வெட்டிக் கொண்டு கீழே விழுந்தான். சற்று நேரம் கழிந்தது. தவளனைத் தேடிக் கொண்டு அவனது மைத்துனனும் வந்தான். தன் தங்கையின் கணவன் வெட்டுண்டு கிடப்பதைக் கண்டு தன் தங்கையின் முகத்தில் இனி எப்படி விழிப்பது என எண்ணி கீழே கிடந்த வாளை எடுத்து அவனும் தன் தலையை வெட்டிக் கொண்டு விழுந்தான்.

தன் கணவனும் அண்ணனும் போய் வெகுநேரமாகியும் அவர்கள் திரும்பி வராததைக் கண்ட அந்தப் பெண் அந்தப் பாழடைந்த கோவிலுக்குள் சென்றாள். அங்கு தன் கணவனின் தலையும் தன் அண்ணனின் தலையும் வெட்டப்பட்டுத் தலைகள் வேறாகவும் உடல்கள் வேறாகவும் கிடப்பதைக் கண்டாள். அவர்கள் இருவரும் இறந்துவிட்டபின் தான் ஏன் உயிர் வாழ வேண்டும் என்று எண்ணி கீழே கிடந்த வாளை எடுத்துத் தன் தலையை வெட்டிக் கொள்ள முயன்றாள்.

அப்போது, ''நில்! அவசரப் படாதே!'' என்று ஒரு குரல் ஒலித்தது. அது காளி விக்கிரகத்திலிருந்து வந்தது என அவள் அறிந்தாள். அதே குரல் ''உன் கணவன் யோகியாக எண்ணித் தன் தலையை வெட்டிக் கொண்டது முட்டாள்தனம். உன் அண்ணனும் முன்பின் யோசிக்காமல் தன் தலையை வெட்டிக் கொண்டான். அவசரப்பட்டு நீயும் உன் தலையை வெட்டிக் கொண்டுவிடாதே! அந்த வெட்டுண்ட தலைகளை உடல்களில்

பொருத்து. அவர்கள் உயிர் பெற்று எழுவார்கள். அதன்பின் நீங்கள் மூவரும் மகிழ்ச்சியாய்ச் செல்ல லாம்.'' என்றது. அவளும் அவசர அவசரமாக அக்குரல் கூறியது போலச் செய்தாள். அப்படிச் செய்த போது தன் கணவனின் தலையைத் தன் அண்ணனின் உடலிலும், தன் அண்ணனின் தலையைத் தன் கண வனின் உடலிலும் பொருத்திவிட் டாள். அவர்களும் உயிர் பெற்று எழுந்தனர்.''

வேதாளம் இந்தக் கதையை விக்கிர மனிடம் கூறி, ''இப்போது அந்தப் பெண் யாரைக் கணவனாக ஏற்க வேண்டும். தன் கணவனின் தலையை யும் தன் அண்ணனின் உடலையும் கொண்ட மனிதனையா அல்லது தன் கணவனின் உடலையும் தன் அண்ண னின் தலையையும் கொண்ட மனித னையா?'' என்று கேட்டது. விக்கிர மன் சற்றும் தயங்காமல் ''அந்தப் பெண் தன் கணவனின் தலையை யும் தன் அண்ணனின் உடலையும் கொண்ட மனிதனைத் தான் தன் கண வனாக ஏற்க வேண்டும். ஏனெனில் எண் சாண் உடம்பிற்கு சிரசே பிரதானம்'' என்றான்.

சோமநாதர் இக்கதையைக் கூறி ''இந்த வேதாளக் கதைக்கும் தற் காலத்தில் நடந்த ஒரு சம்பவத் திற்கும் உள்ள சமநிலையைப் பாருங்கள். டாக்டர் கிரிஸ்டியன் பெர்னார்ட் என்பவர் ஒரு மனிதனின் இருதயத்தை வேறொரு மனிதனின் உடலில் வைத்துப் பொருத்தினார். அது வெற்றிகரமாக முடியவே உலகமே அதை பாராட்டியது. இது போல ஒரு மனிதனின் தலையை வேறொரு மனிதனின் உடலில் பொருத்தி அவனை நடமாடவிடும் காலம் வந்தாலும் ஆச்சரியப்படு வதற்கு இல்லைதான்'' என்று கூறி முடித்தார்.



# இந்தியாவின் இன்முகம்

## வீர வணக்கம்

கொங்கணக் கடற் கரையில் சிந்துதுர்க் என்ற ஊரில் மராட்டிய மாவீர ரான சத்ரபதி சிவாஜிக்கு ஓர் ஆலயம் கட்டப் பட்டுள்ளது. அதில் சிவாஜியின் உருவச் சிலை ஒன்று வைக்கப் பட்டுள்ளது. அதன் கையில் உள்ள வாள் இரு பக்கங்களிலும் தீட்டப் பட்டுள்ளது. இந்த வாளைத் தான் சிவாஜி பயன்படுத்தி வந்தார் எனவும் கருதப்படுகிறது. அந்த ஊரிலுள்ள பல குடும்பங்கள் தம் முன் னோர்கள் சிவாஜியின் படையில் சேர்ந்து பணியாற்றியவர்கள் என்று பெருமைப்பட்டுக் கொள்கிறார்கள்.



## அக்பரின் ரகசியம்

அக்பரின் மேனி பள பளப்பாக இருந்ததன் மர்மம் என்ன தெரியுமா? அவர் தம் உடல் மீது தேய்த்துக் கொண்ட ஸ்நா னப் பொடி மகாராஷ் டிராவிலுள்ள ஔரங்கா பாத் அருகேயுள்ள



லோனார் என்ற ஏரியின் நீரைக் கொண்டு பிசைந்து வைக்கப்பட்டதாம். இந்த ஏரியின் நீர் பல சரும நோய்களைக் குணப்படுத்தும் மருந்து சக்தியைக் கொண்டதாம். இந்த ஏரி ஆகாயத் திலிருந்து ஏதோ ஒரு நட்சத்திரம் விழுந்ததால் பள்ளமாகி ஏற்பட்டதாம். இதில் பல ரசாயன உப்பு கள் கரைந்திருப்பதால் இந்த ஏரியில் ஜீவராசிகள் எதுவும் வாழ முடிவ தில்லை.

## பெண்களின் சக்தி!

நீலகிரி மலைப் பகுதியில் தோடர்கள் என்ற மலைச் சாதியினர் வசிக்கிறார்கள் என்பது யாவருக்கும் தெரிந்ததே. இவர்கள் வசிக்கும் சிறு சிறு பகுதிகள் 'மந்து'கள் எனப்படும் இவர்கள் தமக்கென சில விதி முறைகளை வகுத்துக் கொண்டிருக்கிறார்கள். தோடப் பெண்கள் கோயில்களுக்குள் போகக் கூடாது என்பது அவற்றில் ஒன்று. ஆலயத்திற்கு வெளியே போடப்பட்ட வேலியருகே நின்றே அவர்கள் ஆலய விக்கிரகத்தைத் தரிசிக்க வேண்டும்.



ஆலயத்துள் உள்ள விக்கிரகம் என்ன தெரியுமா? தெக்காயி எனப்படும் காளிதேவியின் விக்கிரகம் தான்.

## அரச வண்ணங்கள்

ஒரு மன்னர் ஆடம்பர சூழ்நிலையில் இருக்கையில் ஹோலிப் பண்டிகைய எப்படிக் கொண்டாடுகிறார் தெரியுமா? இவர் மீதோ அல்லது இவரது குடும்பத்தவர் மீதோ வண்ணப் பொடிகளையோ அல்லது சாயம் கலந்த நீரையோ தெளிக்க மற்றவர்கள் தயங்கத் தானே செய்வார்கள். அதனால் மன்னரும் அவரது குடும்பத்தினரும் மாடிகளின் மேடைகளில் நின்று வண்ண நீரில் தம் ஆடைகளை நனைத்துக் கொண்டு விடுகிறார்கள். இப்படித்தான் ஜெய்ப்பூர் மன்னரும் அவரது குடும்பத்தினரும் ஹோலிப் பண்டிகையைக் கொண்



டாடுகிறார்கள்.

ஹவா மஹல் மேடையில் மன்னர் யானை மீது அமர்ந்து இருப்பாராம். அவரைச் சுற்றி அவரது பல பணியாட்கள் சாய நீருடனோ அல்லது வண்ணப் பொடிகளையோ வைத்துக் கொண்டு நிற்பார்கள். மன்னர் அவற்றை அவர்களிடமிருந்து எடுத்துத் தம் குடும்பத்தவர் மீது தெளிப்பார். அரச குடும்பத்தினர் பீச்சாங் குழல்கள் கொண்டு சாயத் தண்ணீரைத் தமக்குள் அடித்துத் தெளித்துக் கொள்வார்கள்.

# காய் விளையாட்டு

ஒரு தேங்காயைப் பதினான்கு பேர்கள் உயரப் போட்டு அதைப் பிடிக்க முயன்றால் அதை என்னவென்று கூறுவீர்கள்?

அப்படி அந்தத் தேங்காயின் சிறப்பு தான் என்ன? இது அவர்கள் விளையாடும் ஒருவகை விளையாட்டு.

மணிப்புரி இளைஞர்கள் 'காய் பிடி' என்ற இந்த விளையாட்டைத் திறந்த வெளியில் விளையாடுகிறார்கள். இவ்விளையாட்டில் பத்திலிருந்து பதினான்கு பேர்கள் வரை இருப்பார்கள்.

ஒரு முனையில் ஒரு குறிப்பிட்ட இடம் பெட்டி போல அமைக்கப்பட்டிருக்கும். அதன் எதிர்முனையிலிருந்து வழுவழுப்பாக்கப்பட்ட ஒரு தேங்காயைக் குறி பார்த்து அந்தப் பெட்டி போன்ற பகுதிக்கு எறிவார். எறியப்படும் தேங்காயை வேறொருவர் பிடித்து அதையே அவர் அந்தப் பெட்டி போன்ற பகுதிக்குள் போட்டு விட்டால் அவர் வெற்றி பெற்றவர் ஆவார்.

அவரை, தேங்காயை அப்பகுதிக்குள் போட விடாமல் செய்ய மற்றவர்கள் அவர் மீது தண்ணீரால் அடித்துத் தடுக்க முயல்வார்கள்.





# சிரிப்பூட்டும் சிந்தனையாளர்கள் – கோபால் பந்து



அன்று கோபால் பந்துவின் தகப்பனாரின் திவச நாள். அதற்குப் புரோகிதரை அழைத்துவர அவர் படகில் வெகுதூரம் போயாக வேண்டும். படகில் ஏறிய அவர் படகோட்டியிடம், ''வேகமாய்த் துடுப்பு போடு. நான் குறித்த நேரத்துக்குள் புரோகிதரை அழைத்துவர வேண்டும்'' என்று அவசரப்படுத்தினார்.



புரோகிதர் வந்து திவச மந்திரங்களைக் கூறலானார். திடீரென மந்திரத்தைப் பாதியில் நிறுத்தி அவர், ''கோபால்! உன் தந்தை எனக்கு நூறு ரூபாய் கொடுக்க வேண்டும். அந்தக் கடன் பாக்கியைக் கொடுத்தால் தான் மீதி மந்திரத்தைக் கூறி திவசத்தை முடித்து வைப்பேன்,'' என்று கோபாலை மிரட்டினார்.



கோபால் என்ன செய்வார், பாவம்! திவசத்தை முடித்தாக வேண்டுமே, பாதியில் விடக்கூடாதே! அதனால் அவர் புரோகிதரிடம், ''நாளைக் காலையில் நான் பணத்தை உங்கள் வீட்டிற்கே கொண்டு வந்து கொடுத்து விடுகிறேன். இப்போது திவசத்தை முடித்துக் கொடுங்கள்,'' என்று வேண்டினார்.

அது பலாப்பழக் காலம். திவசம் முடிந்த பின் கோபால் பல வீடுகளின் கொல்லைப் புறங்களில் கிடந்த பலாக் கொட்டை களைப் பொறுக்கி எடுத்து வந்தார். அவற்றை ஒரு சாக்குப் பையில் போட்டு எடுத்துக் கொண்டு புரோகிதரின் வீட்டுக்கு அன்றிரவே சென்றார்.





நள்ளிரவில் புரோகிதரின் வீட்டின் கொல்லைப்புறத்தில் பலாக் கொட்டை களைத் தரையில் ஊன்றி வரிசையாகப் புதைத்தார். எல்லாப் பலாக் கொட்டை களையும் புதைத்து முடித்தபோது பொழுது விடிந்துவிட்டது.



புரோகிதர் காலையாகிவிட்டதே என்று தன் வீட்டு வாசல் கதவைத் திறந்து வெளியே அடி எடுத்து வைத்தபோது அங்கு கோபால் உட்கார்ந்திருப்பதைக் கண்டார். அவர் கோபாலிடம், ''என்ன கோபால்! இங்கே ஏன் உட்கார்ந்திருக் கிறாய்?'' என்று ஆச்சரியப்பட்டவாறே கேட்டார்.



கோபாலும், ''என் தந்தை உங்களிடம் கடன் வாங்கிய பணத்தை நான் கொடுப்பதாக நேற்று உங்களிடம் கூறினேன் அல்லவா? அதற்காக உங்கள் வீட்டுப் பின்புறத்தில் பல பலாக் கொட்டைகளை ஊன்றி நட்டிருக்கிறேன். அவை...'' என்று இழுத்தார்.



புரோகிதரோ எரிச்சலுடன், ''கோபால்! பலாக் கொட்டைகள் பணம் அல்லவே!'' என்று கடுகடுப்பாக் கேட்டார். கோபாலும் ''அவை முளைத்து மரங்களானதும் ஏராளமாய் பலாப் பழங்களைக் கொடுக்கும். அவற்றை விற்று நீங்கள் பணத்தை எடுத்துக் கொள்ளுங்கள். உங்கள் வீட்டிற்கே நான் வந்து பணத்தைக் கொடுப்பேன் என்று நேற்றுக் கூறினேனே. அதன்படி நடந்து கொண்டேன், பார்த்தீர்களா?'' என்றார்.

# ஹோலி

ஹோலிப் பண்டிகை வண்ணங்களைப் பரவச் செய்வது. குளிர்காலம் முடிந்து வசந்தகால வருகையைக் காட்டுவது இது. பால்குண மாதப் பௌர்ணமியன்று இப்பண்டிகை கொண்டாடப்படுகிறது. ஏறக்குறைய தமிழ் பங்குனியும், மார்ச் மாத மத்தியிலும் தான் பால்குண மாதம் ஆரம்பமாகும்.

குளிர்காலம் முடிந்து பயிர் அறுவடையாவதும், மரங்கள் துளிர்விட்டு இலைகளாவதும் இந்த வசந்த காலத்தில் தான். இவற்றைக் கண்டு மக்கள் மனம் பூரித்து ஆனந்தமாகக் காலம் கழிக்கிறார்கள்.



இந்தியாவில் ஹோலிப் பண்டிகை மூன்று நாட்கள் கொண்டாடப்படுகிறது. சிறுவர்களும் பெரியவர்களும் குலால் எனப்படும் வண்ணப் பொடிகளை ஒருவர் மீது ஒருவர் வீசிக் களிக்கிறார்கள். சாயத் தண்ணீரையும் பீச்சாங்குழல்களில் நிரப்பி மற்றவர்கள் மீது அடித்து நனைக்கிறார்கள். பலநிற நீர்களை பலூன்களில் நிரப்பி ஒருவர் மீது ஒருவர் வீசி அடிக்கிறார்கள். ஆடியும் பாடியும் பலவித இனிப்புப் பண்டங்களைத் தயாரித்து எல்லோருக்கும் கொடுத்தும் மகிழ்கிறார்கள். ஆண்கள் 'பங்க்' என்ற மதுவைப் பருகி மெய்மறக்கிறார்கள்.

ஹோலி வடஇந்தியாவில் உற்சாகமாகக் கொண்டாடப்படுகிறது. ஹோலிக்கு முதல்நாள் மக்கள் உலர்ந்த இலைகளையும் மரக்கிளைகளையும் ஓரிடத்தில் குவித்துநெருப்பு மூட்டுகிறார்கள். மற்ற பண்டிகைகளைப் போன்று ஹோலியும் நன்மை தீமையை அழிக்கிறது என்று கருதப்படுகிறது. இதுபற்றி பல கதைகள் கூறப்படுகின்றன.

ஸ்ரீகிருஷ்ணரின் தாய்மாமனான கம்சன் குழந்தையாக இருந்த கிருஷ்ணரை ஒழிக்க பூதனா என்ற அரக்கியை அனுப்பினான். அவள் குழந்தைக் கிருஷ்ணருக்குப் பால் கொடுப்பது போல விஷத்தைக் கொடுக்க முயலவே கிருஷ்ணர் அவளது உயிரையே உறிஞ்சிப் போக்கிவிட்டார்.



ஹோலிக்கு முதல் நாளிரவில் பூதனாவின் கொடும்பாவி எரிக்கப் படுகிறது. இன்றும் கிருஷ்ணரின் பிறப்பிடமான மதுராவில் இவ்விதக் கொடும்பாவி எரிக்கப்படுகிறது. கிருஷ்ணர் இந்த வசந்தகாலப் பண்டிகையின்போது தான் கோபிகைகளுடனும் பசுக்களுடனும் கூடி ஆடி மகிழ்ந்தாராம். ஹோலியை கிருஷ்ணரின் ராச லீலைகளுடன் தொடர்புபடுத்திக் கூறுகிறார்கள்.

மதுராவில் கொண்டாடப்படும் ஹோலியில் சட்டி பானைகளை உடைப்பது ஒரு சிறப்பான நிகழ்ச்சியாகும். கிருஷ்ணர் தன் தோழர்களுடன் பல வீடுகளில் நுழைந்து அங்கு உறிகளில் வைக்கப்பட்ட சட்டிகளிலிருந்து வெண்ணெயையும் பாலையும் எடுத்து உட்கொண்டு தம் நண்பர்களுக்கும் பகிர்ந்தளிப்பாராம். அவ்வாறு செய்கையில் சில சமயங்களில் சட்டிகள் கீழே விழுந்து உடையுமாம். அதை நினைவில் கொள்ளவே, ஹோலியின் போது இங்கு சட்டிகள் உடைக்கப் படுகின்றன.

இன்னொரு கதை இரணியகசிபுவின் சகோதரி ஹோலிகாவைப் பற்றியது. நெருப்பு அவளை எதுவும் செய்யாதாம். அதனால் இரணியகசிபு தன் மகன் பிரகலாதன் விஷ்ணு பக்தனாக இருப்பது கண்டு கோபம் கொண்டு அவனை ஹோலிகாவிடம் கொடுத்து நெருப்புக்குள் போகச் சொன்னானாம். அவள் பிரகலாதனுடன் நெருப்பினுள் சென்றதும் அவள் எரிந்து சாம்பலாகி விட்டாளாம். பிரகலாதனுக்கு எவ்விதத் தீங்கும் ஏற்படவில்லையாம். இதனால் நல்லது கெட்டதை வென்றது என்று எண்ணி ஹோலி கொண்டாடப் படுகிறது.

## ஹோலி பற்றிய சில எச்சரிக்கைகள்

✓ சாயங்களைத் தூவும்போது பழைய ஆடைகளையே அணியவும்.

✓ எவ்வித வண்ணப் பொடியும் உங்கள் கண்களுக்குள் சென்று விடாமல் பார்த்துக் கொள்ளவும்.

✓ தவறிப் போய் வண்ணப் பொடி உங்கள் கண்களுக்குள் போய் விட்டால் கண்களைச் சுத்தமாக அலம்பிக் கொள்ளவும்.

✓ ஹோலி கேளிக்கைகள் முடிந்ததும் நன்கு தேய்த்துக் குளிக்கவும்.

✓ நம்பிக்கையான கடைகளிலிருந்து உயர்ரக வண்ணப் பொடிகளையே வாங்குங்கள்.

✓ சாயத் தண்ணீர் நிரப்பப்பட்ட பலூன்களை விளையாட்டாக அமுக்காதீர்கள்.

# ஜாம்ஷெட்ஜீ நவ்ரோஜ்

பார்ஸிகளின் புத்தாண்டு சூரியன் பூமத்திய ரேகைக்கு வரும் தேதியான மார்ச் 21 அன்று ஆரம்பமாகிறது. இது வசந்த காலம் வருவதைக் குறிப்பது. நவ்ரோஜ் என்றால் புதிய நாள் என்று பொருள்.

பாரசீக பஞ்சாங்கத்தைப் பாரசீக மன்னர் ஜாம்ஷெட் சூரியனின் நகர்வைக் கொண்டு கணிக்கச் செய்தார். மேஷ ராசியில் சூரியன் நுழையும் நாள் புதுவருட ஆரம்பம் என கணிக்கப்பட்டது. இது நவ்ரோஜ் அல்லது ஜாம்ஷெட் நவ்ரோஜ் என்ற பெயரில் குறிப்பிடப்படுகிறது. இந்நாளில் மன்னரைத் தங்கத்தாலும் வெள்ளியாலும் நிறுப்பது என்பது நெடுங்காலமாக கடைப்பிடிக்கப்படுவது. அப்படி நிறுக்கப்பட்ட தங்கமும் வெள்ளியும் ஏழைகளுக்குக் கொடுக்கப்படுகிறது.

பண்டிகை நாட்களில் பார்ஸிகள் புத்தாடை உடுத்தி ஆலயங்களுக்குச் சென்று வழிபட்டு பாக் எனப்படும் சமுதாயப் பணிமன்றங்களுக்குச் செல்கிறார்கள். எல்லோரையும் சந்தித்து விருந்து உண்கிறார்கள். பார்ஸிகள் தர்ம தானங்களைச் செய்வதைப் புண்ணியம் என நினைக்கிறார்கள். பண்டிகைகளில் ஒரு பார்ஸி தாராளமாக தானதர்மங்கள் செய்வதை வழக்கமாகக் கொண்டு இருக்கிறான்.



# நல்ல வெள்ளிக்கிழமை

ஈஸ்டருக்கு முன் வந்த வெள்ளிக் கிழமையன்று தான். ஏசுகிறிஸ்து சிலுவையில் அறையப்பட்டாரெனக் கருதப் படுகிறது. எனவே, இந்த வெள்ளிக் கிழமையை 'நல்ல வெள்ளிக் கிழமை' என்றும் 'பெரும் வெள்ளிக் கிழமை' என்றும் கொண்டாடுகிறார்கள். இது துக்கத்தை அனுசரிக்கும் நாள்.அந்த வெள்ளிக்கிழமை மாலை மூன்று மணிக்கு ஏசு சிலுவையில் அறையப்பட்டார் எனக் கருதப்படுகிறது.

கத்தோலிக தேவாலயங்களில் ஏசுவின் உடல் சிலுவையிலிருந்து அகற்றப் பட்டதை அச்சமயத்தில் நினைவு சடங் காகச் செய்கிறார்கள். அந்த நாளில் சர்ச்சின் மணி அடிக்கப்படுவதில்லை. சில சர்ச்களில் கருப்பு உடை அணிந்து ஏசுவின் உருவச் சிலையை ஊர்வலமாக எடுத்துச் சென்று தக்க மரியாதைகளுடன் அதைப் புதைப்பதை ஒரு சடங்காகச் செய் கிறார்கள். இந்த வெள்ளிக்கிழமை அன்று எல்லாக் கிறிஸ்துவர்களும் உண்ணா நோன்பை மேற்கொள்கிறார்கள்.



# முஹரம்



முஹரம் பண்டிகை முஸ்லிம்களின் முதலாவது மாதமான முஹரம் மாதத்தின் பத்தாவது நாளன்று கொண்டாடப்படுகிறது. இது நபிகள் நாயகத்தின் பேரரான ஹுசைனின் நினைவில் துக்க நாளாக அனுசரிக்கப் படுகிறது. ஏனெனில் அன்று தான் ஹுசைன் வீரமரணம் எய்தினாராம்.

நபிகள் நாயத்தின் மறைவிற்குப் பின் மதத்தைக் காக்கும் கலீபா என்ற பதவிக்கு ஒருவரைத் தேர்ந்தெடுக்க வேண்டியதாயிற்று. நபிகள் நாயகத் திற்கு மகனும் இல்லை. யாரையும் அப்பதவிக்கு அவர் குறிப்பிடவும் இல்லை. அவருடைய மகள் பாத்திமா, அலி என்பவரை மணந்து கொள்ள அவர்களுக்கு ஹசனும் ஹுசைனும் பிறந்தார்கள்.

நபிகள் நாயகத்திற்குப் பின் மூன்று கலீபாக்கள் பதவியில் இருந்தார்கள். அவர்களுக்குப் பின் அலி நான்காவது கலீபாவாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். பலர் இந்தத் தேர்வை எதிர்த்தார்கள். அலி கொல்லப்பட்டார். அதன்பின் அவரது மகன் ஹசன் கலீபாவாகப் பதவி ஏற்றார். அலியின் மற்றொரு மகனான ஹுசைன் கெர்பேலாப் போரில் பரிதாபமாக உயிரிழந்தார். இது முஹரம் மாதத்துப் பத்தாவது நாளில் நடந்தது.

இந்த நாளைத் துக்க நாளாக முஸ்லிம்கள் அனுசரிக்கிறார்கள். தாஜியாக்களை ஊர்வலத்தில் எடுத்துச் சென்று அழுது புலம்பி அவற்றைப் புதைக்கிறார்கள். அல்லது கடலிலோ ஆற்றிலோ எறிந்துவிடுகிறார்கள். முஹர மாதத்தின் முதல் பத்து நாட்களில் உண்ணாதிருந்தும் துக்கத்தை வெளிப்படுத்தியும் தொழுகைகள் நடத்தியும் வருகிறார்கள்.

## பஞ்சாப் மாநிலப் பழங்கதை

பஞ்சாப் என்ற பெயர் அங்கு ஐந்து நதிகள் ஓடுவதால் வந்தது. பஞ்ச் + ஆப் என்பது தான் அச்சொல்லைப் பிரிக்கும் விதம். பியாஸ், சட்லஜ், ரவி, சீனாப், ஜேலம் எனப்படுபவை அந்த ஐந்து நதிகள். ஆனால் பிரிவினைக்குப் பிறகு தற்போதைய பஞ்சாப் மாநிலத்தில் பியாஸும் சட்லஜுமே உள்ளன.

இந்த மாநிலத்தின் வடக்கே ஜம்மு, கஷ்மீரும், கிழக்கே ஹிமாசலப் பிரதேஷும், தெற்கே ஹரியானாவும் ராஜஸ்தானும், மேற்கே பாகிஸ்தானும் உள்ளன. பஞ்சாபிற்கும் ஹரியானாவிற்கும் பொதுவான தலைநகர் சண்டிகட். இம்மாநிலத்தின் பரப்பளவு 50,000 சதுர கி.மீ. மக்கள் தொகை 24,28,300. ஆட்சி மொழி பஞ்சாபி. இது குருமுகி எழுத்துக்களில் எழுதப்படுகிறது.

தற்போதைய பஞ்சாப் மாநிலம் 1966 நவம்பர் 1ல் உருவாக்கப்பட்டது. இதன் முந்தைய பரப்பளவில் இருந்து ஒரு பகுதி தனியாகப் பிரிக்கப்பட்டு ஹரியானா மாநிலமாக ஆக்கப்பட்டது.

பசுமைப் புரட்சியை முதலில் செய்து நிறைய பயிரை நவீன முறையில் உற்பத்தியை மிகவும் அதிகரித்த மாநிலம் இதுவே. பால் உற்பத்தியிலும் இது முதலிடம் பெற்றுள்ளது.

# ஏழாவது அரசகுமாரன்

ஒரு காலத்தில் இருந்த சதீந்தர் என்ற மன்னனுக்கு ஏழு புதல்வர்கள் இருந்தனர். அவனது அண்டை நாட்டு மன்னன் பதீந்தருக்கு ஏழு புதல்விகள் இருந்தனர். பதீந்தர் தன் ஏழு புதல்விகளையும் சதீந்தரின் ஏழு புதல்வர்களுக்கு மணம் செய்து கொடுக்க எண்ணி ஒரு தூதுவனைச் சதீந்தரிடம் அனுப்பினான். சதீந்தர் தன் ஏழு புதல்வர்களுக்கும் அரசகுமாரிகள் கிடைப்பது கண்டு மகிழ்ந்து அவர்களது திருமணங்களுக்கு இசைவு தெரிவித்தான்.



ஆனால் சதீந்தரின் ஏழாவது மகனான ராஜேந்தருக்கு உடனே மணம் செய்து கொள்ள விருப்பமில்லை. மேலும் தன் மற்ற சகோதரர்கள் எல்லோரும் ஒரே சமயத்தில் விவாகம் செய்து கொண்டாலும், தான் ஏன் அவர்களோடு திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று தன் தந்தையிடம் அவன் வாக்கு வாதம் புரிந்தான்.

அவனது பிடிவாதத்தைக் கண்ட சதீந்தர், ''சரி. என் மற்ற ஆறு புதல்வர்களுக்கும் பதீந்தரின் ஆறு புதல்விகளை மணம் செய்து வைத்துவிடுகிறேன். உன் திருமணம் நீ விரும்பும்போது நடக்கட்டும்'' என்றான். அதன்படியே விரைவில் சதீந்தரின் ஆறு புதல்வர்கள், பதீந்தரின் ஆறு புதல்விகளை மணந்து கொண்டனர். அந்த ஆறு அரசகுமாரிகளும் சதீந்தரின் அரண்மனைக்கு வந்தார்கள்.

பதீந்தரின் ஆறு புதல்விகளும் தம் தங்கையை எப்படியாவது ராஜேந்தருக்கு மணம் செய்து வைத்துவிட வேண்டுமென்று எண்ணினார்கள். ஒரு நாள் மூத்தவள் அதுபற்றி அவனிடம் பேசவே, அவன் கொஞ்சமும் அசைந்து கொடுக்காமல் இருந்தான். அதனால் எரிச்சலடைந்து அவள், ''நீ யாரை மணந்து கொள்வதாக எண்ணிக் கொண்டிருக்கிறாய்? அனார்கலியையா? அவளொன்றும் உனக்குக் கிடைக்க மாட்டாள்'' என்றாள். அப்போது அவளுடைய மற்ற சகோதரிகளும், ''உன்னுடைய அழகிற்கு அனார்கலி ஒன்றும் கிடைக்க மாட்டாள்'' என்று குத்தலாகக் கூறினார்கள்.

இதனால் ஆத்திரம் கொண்டு அவன், ''இதோ பாருங்கள். நான் இப்போதே போய் அனார்கலியைக் கண்டு, அவளை மணந்து கொண்டுதான் இங்கு திரும்பி



வருவேன். இது சத்தியம்'' எனக் கூறிவிட்டுத் தன் தந்தையிடமும் அவ்வாறே கூறினான். சதீந்தர் அவனைக் கடிந்து கொண்டான். அவனது தாயார் அரண்மனையை விட்டுப் போக வேண்டாம் என்று வேண்டினாள். அவனது சகோதர்களோ அவனை முட்டாள் என்று கூறி வைதார்கள். அவற்றை எல்லாம் லட்சியம் செய்யாமல் ராஜேந்தர் அனார்கலியைத் தேடக் கிளம்பிவிட்டான். குதிரையில் சவாரி செய்தவாறே அனார்கலி எங்கே இருப்பாள், எப்படி இருப்பாள் என்று அவன் யோசித்துக் கொண்டு சென்றான்.

வெகுதூரம் போனபின் அவன் ஒரு பூங்காவை அடைந்தான். அதிலிருந்த செடி கொடிகள் எல்லாம் வாடிக் கிடப்பதைக் கண்டான். அந்தப் பூங்காவில் ஒரு கிணறு இருப்பது கண்டு அங்கு போய் முதலில் தன் தாகத்தைத் தீர்த்துக் கொண்டான். கிணற்றங்கரையில் சில

# பலே, பேஷ்!

பஞ்சாபின் இரு நாட்டுப்புற நடனங்கள் பிரபலமானவை. ஒன்று கிட்டா எனப்படுவது. மற்றது பாங்க்ரா நடனம். முன்காலத்தில் வைகாசியின் போது அறுவடைக்குப் பின் கிராமங்களில் பாங்க்ரா நடனங்கள் நிகழ்ந்து வந்தன. தற்போது பாங்க்ரா நடனங்களைத் திருமணங்களின் போதும், புத்தாண்டின் ஆரம்ப நாளிலும், பிறந்த நாள் கொண்டாட்டங்களிலும் மற்றும் சமுதாய நல நிகழ்ச்சிகளின் போதும் நடத்துகிறார்கள்.

இந்நிகழ்ச்சிகளில் ஆட்டம்பாட்டங்கள் வேகவேகமாக நிகழ்த்தப்படுகின்றன. இதில் 'டோல்' எனப்படும் மத்தள வகை இசைக் கருவி பாங்க்ரா நடனத்திற்குப் பக்கவாத்தியமாக விளங்குகிறது. இதில் பாடப்படும் பாடல்களின் கருத்துக்கள் பெரும்பாலும் பஞ்சாபின் பழங்காலக் கதைகளிலிருந்து எடுத்து மெட்டு அமைக்கப்பட்டவை.



மண் குடங்கள் இருப்பதைக் கண்டான். அவற்றில் ஒன்றை எடுத்து நீரை மொண்டு வாடிக் கிடக்கும் செடிகொடிகளுக்கு விட்டான். சற்று நேரத்தில் அவை நிமிர்ந்தது கண்டு மகிழ்ந்து போய் அவன் அப்பூங்காவைச் சுற்றிப் பார்க்கலானான். அப்போது அவன் ஓரிடத்தில் ஒரு யோகீஸ்வரர் தியானத்தில் அமர்ந்திருப்பதைக் கண்டான்.

அந்தப் பூங்காவை அமைத்தவரே அவர்தாம். அவர் ஆறு மாதங்களுக்கு அங்குள்ள செடி கொடிகளுக்குத் தண்ணீர் பாய்ச்சுவார். மற்ற ஆறு மாதங்களில் தியானத்தில் அமர்ந்துவிடுவார். தியானம் முடிந்த பிறகு மீண்டும் ஆறு மாதங்களுக்குச் செடிகொடிகளைக் கவனித்துக் கொள்வார். அதன்பின் மீண்டும் ஆறு மாதங்களுக்குத் தியானம்.

ராஜேந்தர் தியானத்திலிருந்த அவர் எப்போது தியானம் கலைந்து கண் விழிப்பார் என்று காத்திருந்தான். அவரிடம் அனார்கலியைப் பற்றி விசாரித்து விவரங்கள் தெரிந்து கொள்ள வேண்டுமென்பதே அவனது நோக்கம். அவர் கண்விழிக்கச் சில நாட்களாயின. அதுவரை ராஜேந்தர் பூங்காவின் செடிகொடிகளுக்குத் தண்ணீர் விட்டு அவை பச்சைப் பசேலென இருக்கும்படிச் செய்தான்.

சில நாட்களுக்குப் பின் கண் விழித்த யோகீஸ்வரர் பூங்காவின் செடிகொடிகள் நன்கு வளர்ந்திருப்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டார். அப்போது ராஜேந்தர் செடிகொடிகளுக்குத் தண்ணீர்விட்டுக் கொண்டிருப்பதை அவர் கண்டார். ராஜேந்தரும் அவர் தியானம் கலைந்து கண் திறந்ததைக் கண்டு, அவரருகே சென்று அவரை வணங்கி நின்றான். அவரும், ''நீ தான் இந்தப் பூங்காவின் செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றி நன்கு வளர்த்து வந்தாயா?'' எனக் கேட்க,

அவனும் ''ஆம். நான் செடிகொடிகளுக்குத் தண்ணீர் மட்டும் தான் பாய்ச்சினேன்,'' என்றான்.

அதுகேட்டு யோகீஸ்வரர் ''நீ மிகவும் நல்லவன். உனக்கு என்ன வேண்டுமோ கேள். அதை நான் கொடுக்கிறேன்'' என்றார். அவனும் பணிவுடன், ''மகாத்மாவே! நான் ஓர் அரசகுமாரன். என் அரண்மனையில் எனக்கு வேண்டிய பணமும் பொருள்களும் குறைவில்லாமல் இருக்கின்றன. நான் அனார்கலி என்ற பெண்ணைத் தேடித் திரிகிறேன். அவளைப் பற்றி ஏதாவது தாங்கள் கூறினால் மிகவும் நன்றி செலுத்துவேன்'' என்றான்.

அவரும், ''இந்தப் பந்தை நீ தட்டிக் கொண்டே போனால் இது ஒரு மாதுள மரத்தடியே போய் நிற்கும். அப்போது அம்மரத்தில் நீ பார்க்கும் மிகப் பெரிய மாதுளம் பழத்தைப் பறித்து எடுத்துக் கொள். அதை நீ உன் ஊருக்குப் போய் வீட்டில் அறுத்துப் பார். உனக்கு அனார்கலி கிடைப்பாள். அதற்கு முன் அதனை நீ அறுத்தால், நீ அவளை இழந்துவிடுவாய்'' என்று கூறி, ஒரு பந்தை அவனிடம் கொடுத்தார். அவனும் அதை வாங்கிக் கொண்டு, யோகீஸ்வரரிடம் விடைபெற்றுக் கொண்டு அதைக் கீழே போட்டு தட்டிக் கொண்டே சென்றான்.

அந்தப் பந்து ஒரு மாதுள மரத்தின் கீழ் போய் நின்றது. ராஜேந்தர் அதில் இருந்த மிகப்பெரிய மாதுளம் பழத்தைப் பறித்து எடுத்துக் கொண்டு தன் ஊருக்குச் சென்றான். ஊரில் அரண்மனைக்கு வெகு சமீபத்தில் அணுகிய போது அவனுக்கு ஒரு சந்தேகம் ஏற்பட்டது. அரண்மனைக்குள் போய் எல்லோர் முன்னிலையிலும் மாதுளம் பழத்தை அறுத்ததும் அனார்கலி வராது



போய்விட்டால் பெருத்த அவமானம் ஏற்படுமே என அவன் பயந்தான். எனவே அரண்மனை வளாகத்திலேயே ஓரிடத்தில் உட்கார்ந்து அந்தப் பழத்தை அறுத்தான். மறுவிநாடியே அதிலிருந்து பளபளப்பான உடைகள் அணிந்த பெண் ஒருத்தி அவன்முன் தோன்றினாள். அவளைக் கண்ட ராஜேந்தர் தன் நினைவை இழந்து விழுந்துவிட்டான். அந்தப் பெண் அனார்கலி அவனது தலையைத் தூக்கித் தன் மடியின் மீது வைத்துக் கொண்டு அவன் எப்போது தன் நினைவை அடைந்து கண் விழிப்பான் என்று காத்துக் கொண்டிருந்தாள்.

அப்போது ஹர்பிரீத் என்ற பெண் வந்து அனார்கலியிடம், ''அழகிய பெண்ணே! நீ யார்? என்ன நடந்தது?'' என்று கேட்டாள். அவள் நடந்ததை எல்லாம் அந்தப் பெண்ணிடம் கூறினாள். பிறகு ''இவர் என்னைச் சில நொடிகளே பார்த்தார். பிறகு நினைவிழந்து விழுந்து விட்டார்'' என்றாள்.

அதைக் கேட்ட ஹர்பிரீத் அரசகுமாரன் ராஜேந்தரை மணக்க எண்ணினாள். அவள் அனார்கலியின்

ஆடைகளைப் பார்த்தாள். ''ஆகா! எவ்வளவு அழகான ஆடைகள்! அவற்றை ஒரு நிமிடம் நான் போட்டுக் கொண்டு அழகு பார்க்கட்டுமா? நீ என் ஆடைகளை அணிந்துகொண்டு அவற்றைக் கொடுக்கலாம்'' என்றாள். அனார்கலி தன் ஆடைகளைக் களைந்து ஹர்பிரீத்திடம் கொடுத்தாள். அவளும் அவற்றை அணிந்து கொண்டு, ''வா, அந்தக் கிணற்று நீரில் என் அழகை நாம் இருவரும் சேர்ந்து பார்க்கலாம்,'' என்று கூறி அனார்கலியைக் கிணற்றிற்கு அழைத்துச் சென்றாள்.

கிணற்றில் ஹர்பிரீத்தின் முக அழகை அனார்கலி பார்த்துக் கொண்டிருந்தபோது அவளை ஹர்பிரீத் கிணற்றிற்குள் தள்ளிவிட்டு ஓடோடி வந்து ராஜேந்தரின் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டாள். ராஜேந்தர் கண்விழித்து அனார்கலியின் ஆடைகளை அணிந்திருந்த ஹர்பிரீத்தைப் பார்த்து அவளே அனார்கலி என எண்ணிவிட்டான். அவளை அழைத்துக் கொண்டு அவன் அரண்மனைக்குள் சென்றான். யாவரும் அவ்விருவரையும் வரவேற்றனர். விரைவிலேயே அவர்களுக்கு விவாகம் நடந்தது. அவர்கள் தனி மாளிகையில் குடிபுகுந்தார்கள். அப்போது அரண்மனை வளாகத்திலுள்ள கிணற்றில் ஒரு பெரிய அழகிய மலர் இருப்பதாக எங்கும் செய்தி பரவியது. யாராலும் அந்த மலரைப் பறித்து எடுக்க முடியவில்லை. அதைக் கேட்ட ஹர்பிரீத் அந்த மலர் அனார்கலியே எனப் புரிந்து கொண்டு ராஜேந்தரிடம், ''எனக்கு ஒரே தலைவலி தாங்க முடியவில்லை. அரண்மனை வளாகத்திலுள்ள கிணற்றில் தென்பட்ட மலரைக் கொண்டு வாருங்கள். அதைக் கசக்கி அதன் சாறை நான் நெற்றியில் தடவிக் கொண்டால் தலைவலி போய்விடும்'' என்றாள்.

ராஜேந்தர் அந்த மலரைப் பறித்து எடுத்து வந்து ஹர்பிரீத்திடம் கொடுக்க, அவள் அதைக் கசக்கி சாறை நெற்றியில் தடவிக் காண்டு கசக்கிய மலரை வீட்டு மதில் சுவருக்கு அப்பால் எறிந்தாள். அவள் தலைவலி அதிகரித்தது. ஆனால் அவள் வீட்டிற்கு வெளியே எறிந்த மலர் அங்கு ஒரு பூங்காவை உண்டாக்கிவிட்டது. அதன் மத்தியில் ஒரு மாதுள மரம் முளைத்தது. அதில் மிகப் பெரிய மாதுளம்பழம் தொங்கியது. அதைக் கண்ட ஹர்பிரீத் ''இதென்ன மாயாஜாலம்! எனக்கு பயமாக இருக்கிறது. அந்தத் தோட்டத்தை அழியுங்கள்,'' என்று ராஜேந்தரிடம் கூறினாள். அவனோ

## கைவினைப் பொருட்கள்

பஞ்சாப் தரை விரிப்புகளைத் தயாரிப்பதில் பெயர் போனது. இளம்பெண்கள் இவற்றை நெய்கிறார்கள். இதில் பலவித அழகிய வேலைப்பாடுகளைக் காணலாம்.

மற்றொன்று கைவேலை துணிகளில் பூவேலை செய்வது. இதை பூல்காரி என்கிறார்கள். கைக்குட்டை முதல் புடவைகள் வரை இவ்வேலை அவற்றில் செய்யப்படுகிறது. பஞ்சாபின் மர வேலையும் கடைசல்களும் பெயர் பெற்றவை.





எல்லோரிடமும், ''உங்களுக்கு வேண்டிய மலர்களையும் காய்களையும் பறித்துக் கொண்டு தோட்டத்தை அழித்து விடுங்கள்!'' எனவே, எல்லோரும் மலர்களையும் காய்களையும் பறித்துக் கொண்டு தோட்டத்தை அழித்தனர்.

கடைசியாக வந்த ஒரு சிறுவன் மிகுந்த பெரிய மாதுளம் பழத்தைப் பறித்து தன் வீட்டிற்கு எடுத்துக் கொண்டு போனான். அதை அவனது தாயார் இரவில் அறுத்தாள். அப்போது அதிலிருந்து அனார்கலி வெளியே வந்தாள். அவர்களைப் பார்த்து, ''பயப்படாதீர்கள். நானும் உங்கள் குடும்பத்தவர்களில் ஒருத்தியாக இருந்து வேலை செய்து சம்பாதிக்கிறேன்'' என்றாள்.

அவள் மறுநாள் காலையில் ஒரு துணியை எடுத்து பூவேலை செய்து, ஒரு கைக்குட்டையாக்கி அவ்வீட்டுச் சிறுவனிடம் கொடுத்தாள். அதைக் கொண்டுபோய் அரசகுமாரன் ராஜேந்தரிடம் விற்கச் சொன்னாள். சிறுவனும் ராஜேந்தரிடம் கைக்குட்டையை காட்டி விற்க முயலவே, அதைப் பார்த்த ராஜேந்தர் ''இந்த அழகான பூவேலையை யார் செய்தது?'' என்று கேட்டான்.

சிறுவனும் ''என் சகோதரி'' எனவே, அவன் ''இவ்வளவு திறமையுள்ள உன் சகோதரியை நான் பார்க்க விரும்புகிறேன்,'' என்றான். சிறுவனும் அவனைத் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றான். அங்கு அவன் அனார்கலியைக் கண்டதும் அடையாளம் கண்டுகொண்டான். பிறகு அச்சிறுவனின் தாயாரின் அனுமதி பெற்று அவன் அவளை மணந்து கொண்டான். பிறகு அவன் அரண்மனைக்குப் போய் கபட ஹர்பிரீத்தை நாடு கடத்திவிட்டு அனார்கலியுடன் சுகமாக வாழ்ந்தான்.

## பார்க்க ஆவல் மூட்டும் இடங்கள்

அமிருத்சர் சீக்கியர்களின் புனிதத் தலம். அமிருத்சர் என்றால் அமுதக் குளம் என்பது பொருளாம். இந்நகரைச் சீக்கியர் நான்காவது குருவான குருராம்தாஸ் நிர்மாணித்தார். இங்குள்ள பொற்கோயில் சீக்கியர்களுக்கு மிகமிகப் புனிதமானது. இதனுடைய கோபுரப் பகுதி தங்கத் தகட்டால் மூடப்பட்டுள்ளது. 1919ல் டையர் நடத்திய படுகொலை இடமாகிய ஜாலியன் வாலா பாக் இதன் அருகே தான் உள்ளது.

சண்டிகட் நன்கு திட்டமிட்டு கட்டப்பட்ட நகரம். இதனை பிரெஞ்சு கட்டடக் கலை வல்லுநர் லே கோர் பூசியர் அமைத்துக் கொடுத்தார். பாறைப் பூங்கா, ரோஜாப் பூங்கா, மின்ஜோர் பூங்கா இத்தலைநகரில் பார்த்து ரசிக்கத்தக்கவை.

# சிட்டுக்குருவியின் சின்னக் கேள்வி

தாய்க்குருவி தன் கடைசிக் குஞ்சைக் கனிவுடன் பார்த்தது. ஏனெனில் அதன் மற்ற குஞ்சுகள் வளர்ந்து பெரியனவாகிப் பறந்து போய்விட்டன. இந்தக் கடைக் குஞ்சு தான் பறக்க முடியாமல் இருந்தது. தாய்ப் பறவை அது எப்போது பறக் கும் என்று கவலைப்பட்டது. அது தன் குஞ்சைப் பார்த்து, ''உம். நீ கொஞ்சம் பறக்க முயன்று பார்!'' என்று கூறியது. அதுவும் ''ஆகட்டும், அம்மா!'' எனவே, தாய்ப் பறவை அதனை அழைத்துக் கொண்டு கூட் டிலிருந்து வெளியே சென்றது.

அன்று குஞ்சுக் குருவி கொஞ்சம் பறந்தது. நாலைந்து நாட்கள் பழகி



அது ஊரையே சுற்றி வந்துவிட்டது. அதைக் கண்ட தாய்ப் பறவை மகிழ்ந்து போய் அதனிடம், ''இது வரை சரிதான். இனி நீ உலகைப் புரிந்து கொள்ள வேண்டும். நீ எப்படியெல்லாம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்று கூறுகிறேன். கேட்டுக் கொள்!'' என்றது.

குஞ்சு தன் தாய் சொல்வதைக் கவனமாகக் கேட்கலாயிற்று. தாய்ப் பறவையும், ''நீ வயலில் இருக்கும் போது யாராவது வில்லுடனும் அம் புடனும் வந்தாலோ அல்லது கவட் டைக் குச்சியுடன் பார்த்தாலோ, நீ உடனே அங்கிருந்து பறந்து போய் விடு,'' என்றது. ''சரி அம்மா!'' என்று குஞ்சுப் பறவை கூறவே, தாய்ப் பறவையும் ''யார் கையிலும் எதுவும் இல்லாதிருந்தால் நீஅவனைக் கண்டு பயப்பட வேண்டியதும் இல்லை'' என்றது.

அப்போது குஞ்சு, ''சரியம்மா! ஆனால் யாராவது என்னை அடிக்கத் தன் சட்டைப் பைக்குள் கற்களை மறைத்து வைத்திருந்தால் நான் என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்டது. அதைக் கேட்ட தாய்ப் பறவை திகைத்து விட்டது. பிறகு அது ''இனி நான் உனக்கு எந்த அறிவுரையும் கூறத் தேவையில்லை. நீ உலகை நன்கு புரிந்து கொண்டுவிட்டாய். இனி நீ பறந்து எங்கு வேண்டுமானாலும் போகலாம்'' என்றது.



# விநாயகர்

தாரகாசுரனைப் போலவே திரிபுராசுரர்கள் என்ற மூன்று ராட்சஸர்கள் தவம் செய்து வரங்களைப் பெற்று ஆகாயத்தில் பறந்து மூன்று உலகங்களில் உள்ள ஊர்களையும் மக்களையும் நாசம் செய்து அழித்து வந்தார்கள். அவர்கள் தமக்கென மூன்று பட்டணங்களையும் நிர்மாணித்துக் கொண்டு அவற்றில் இருந்து வந்தார்கள்.

அவர்களை அழிக்கக் கூடியவர் சிவன் ஒருவரே என அறிந்த தேவர்கள் கைலாசத்திற்கு வந்து தலைவாசலில் நின்று சிவனைத் துதிக்கலானார்கள். அவர்கள் பல நாட்கள் இவ்வாறு துதித்த போது புதிய இல்வாழ்க்கையை மேற்கொண்ட சிவன் திரிபுராசுரர்கள் செய்யும் அக்கிரமங்களைக் கேட்டு, அவர்களை ஒழிக்க உடனே அவர் தன் சிவகணங்களோடு கிளம்பினார்.

அதே சமயம் யானை போன்ற உருவில் ஓர் அசுரனும் உலக மக்களுக்குத் தொல்லை கொடுக்கலானான். கஜாசுரன் என்ற அவன் சிவபக்தன். சிவனைத் தவிர வேறு யாராலும் அவனைக் கொல்ல முடியாது என்ற வரத்தையும் பெற்றவன்.

நாரதர் அவனைக் கண்டு, ''நீ சிவனைப் பூஜிப்பதைவிட அவரை ஏதாவது ஒரு உருவமாக்கி உன் மார்பிற்குள் வைத்துக் கொள்'' என, நல்லுபதேசம் செய்வது போலச் சொன்னார். கஜாசுரனும் சிவனை நோக்கிக் கடுந் தவம் புரிந்தான்.

திரிபுராசுரர்களை அழிக்கக்



கிளம்பிய சிவன் கஜாசுரனின் தவத்தால் மகிழ்ந்து அவன் கேட்ட வரப்படி அவனது மார்பில் லிங்க வடிவில் இருக்கலானார்.

தேவர்களோ, ''சிவன் இப்படிப் போய் கஜாசுரனின் மார்பினுள் உட்கார்ந்துவிட்டாரே. இவருக்கும் பார்வதிக்கும் இனி எப்படி மகன் பிறந்து தாரகாசுரனை அழிக்கப் போகிறான்?'' எனக் கவலைப்பட்டனர். நாரதரோ, ''நீங்கள் கஜாசுரனின் முன் போய் சிவனைத் துதித்தால் அவர் பூரித்து பெரிய உருவம் எடுப்பார். அப்போது கஜாசுரன் அழிவான். சிவனும் வெளியே வந்து உங்களுக்கு உதவுவார்'' என்றார்.

உடனே தேவர்கள் எல்லோரும் கஜாசுரனின் முன் போய் சிவனைத் தோத்திரம் செய்யலானார்கள். கஜாசுரனும் அவர்களோடு சேர்ந்து சிவனைத் துதிக்கலானான். அதனால் சிவன் பூரித்து பெரிய உருவம் எடுக்க கஜாசுரனின் மார்பு பிளந்து போயிற்று. கஜாசுரன் இறந்து விழுந்தான்.

அப்போது கஜாசுரன் சிவனிடம், ''உங்கள் பக்தனான என்னை இப்படிச் செய்துவிட்டீர்களே!'' எனக் கேட்க, சிவனும் ''கவலைப்படாதே! நீ எப்போதும் என்னுடன் இருக்க உன் முகத்தை எடுத்துச் செல்கிறேன். உன் தோலான யானைத் தோலை ஆடையாக உடுத்திக் கொள்கிறேன்'' எனக் கூறி அவன் தோலை உடுத்திக் கொண்டு கைலாசத்திற்குச் சென்றார்.

பின்னர் அவர் பூமியைத் தேராகவும், சூரியசந்திரர்களைத் தேர்ச் சக்கரங்களாகவும், வேதங்களைக் குதிரைகளாகவும், பிரம்மாவை தேரோட்டியாகவும், மேருமலையை வில்லாகவும், விஷ்ணுவை அம்பாகவும் மாற்றித் தன் சிவகணங்களான நந்தி, சிருங்கி, பிருங்கி ஆகியவர்களுடனும், தேவர்களுடனும் திரிபுராசுரர்களை அழிக்கக் கிளம்பிச் சென்றார்.

வீட்டில் தனியாக இருந்த பார்வதி சிவன் எப்போது திரும்பி வருவார் என்பது தெரியாமல் தவித்தாள். அப்போது நாரதர் வேறு வந்து, ''அம்மா பார்வதி! நீ சிவனை மணந்து கொண்டதிலிருந்து தாரகாசுரன் உனக்குத் தொல்லை கொடுக்கத் தீர்மானித்துவிட்டான். அவனுக்குத் துணையாக வஜ்ஜிரதந்தன் என்பவனும் இருக்கிறான். அவன் மாயாஜாலங்கள் புரிபவன். எனவே எச்சரிக்கையுடன்

இரு!'' எனக் கூறிச் சென்றார்.

அதுகேட்டு பார்வதிக்கு மேலும் பயம் பிடித்தது. நன்கு குளித்துவிட்டு சற்று அயர்ந்து தூங்கினால் மன நிம்மதி ஏற்படலாம் என அவள் எண்ணி தன் காலில் இட்டுக் கொண்ட மருதாணி விழுதை எடுத்து ஒரு சிறு பொம்மையாக்கி அதனைத் தடவவே, அது ஒரு சிறுவனாகி விட்டது.

அதைக் கண்ட பார்வதி, ''யாரப்பா நீ?'' என்று கேட்க அவனும், ''உன் பிள்ளை அம்மா. நான் தான் பிள்ளையார்'' என்றான். பார்வதியும் மகிழ்ந்து ஓர் அங்குசத்தை அவனிடம் கொடுத்து, ''நீ வாசலில் நின்று உள்ளே ஒரு புழு பூச்சி கூட நுழை யாமல் காவல் புரி!'' எனக் கூறி விட்டுக் குளிக்கச் சென்றாள். பிள்ளை யாரும் தலைவாசலில் நின்று காவல் காக்கலானார். பார்வதி தனியாக இருப்பது தெரிந்து அவளைத் தூக்கி வந்து கொன்றுவிட தாரகாசுரன் திட்ட மிட்டான். பார்வதி இறந்துவிட்டால் அவளுக்கும் சிவனுக்கும் பிறக்கும் குழந்தை ஏது என்றே அவன் வஜ்ஜிர தந்தனை அப்பணியைச் செய்ய அனுப்பினான்.

அவன் பயங்கரப் பற்களைக் கொண்ட மூஞ்சூறு போல மாறி னான். இதனால் அவனுக்கு மூஷிகா சுரன் என்ற பெயரும் ஏற்பட்டது. அவன் தான் போவதற்கு முன் தன் கையாட்களான கஜகர்ணன், கோகர் ணன் என்ற இருவரை முதலில் அனுப்பினான்.



அவர்கள் எருமைக் கடாக்கள் போலக் கொழுத்து வளர்ந்தவர்கள். அவர்கள் பார்வதியின் இல்ல வாச லுக்கு வந்து உள்ளே நுழையப் பார்த் தார்கள். வாசலில் ஒரு சிறுவனைக் கண்டதும் அவர்கள் ''தம்பீ! எங்க ளோடு கண்ணாமூச்சி விளையாட வருகிறாயா?'' என்று கேட்டு ஏமாற் றப் பார்த்தார்கள்.

பிள்ளையாரோ அவர்களைச் சற் றும் மதியாமல், ''இந்தா! இதைப் பிடித்துச் சாப்பிட்டு ஒழியுங்கள்'' என்று பார்வதி தேவி கொடுத்ததில் இரு மோதக உருண்டைகளை எடுத்து அவர்கள் பக்கம் விட்டெறிந்தார். அது அவர்கள் மீது பட, அவர்கள் வலி பொறுக்காமல் ஓடினார்கள். ஆனால் அவை அவர்களின் முன் எகிறி விழுந்து பாறைகளாகின.



அவற்றின் மீது அவர்கள் கால் தடுக்கி விழுந்தார்கள்.

அப்போது பிள்ளையார் அவர்களைக் கூப்பிட்டு, ''அடே! காதைப் பிடித்துக் கொண்டு மூன்று தோப்புக் கரணங்கள் போட்டு தாடையில் போட்டுக் கொண்டு பேசாமல் திரும்பிப் போங்கள்'' என்றார். அவர்களும் அவ்வாறே செய்துவிட்டு வஜ்ஜிரதந்தனிடம் போய் நடந்ததை எல்லாம் கூறினார்கள்.

அதுகேட்டு வஜ்ஜிரதந்தன் எலியாக மாறி பார்வதியின் இல்லத்திற்கு ஓடினான். பிள்ளையார் தன் கையிலிருந்த கயிறை சுருக்குப் போட்டு அந்த எலியின் கழுத்தில் போட்டு இழுத்தார். அந்த எலியின் தலையில் நான்கு குட்டுகள் குட்டி அதன் வாலைப் பிடித்துத் தூக்கி கிர்கிர்ரென்று சுற்றி தூர விட்டெறிந்தார்.

வஜ்ஜிரதந்தன் வெகுதூரமுள்ள தலைநகரில் அந்தப்புரத்தில் போய் 'பொத்'தென்று விழுந்தான். அவனது மனைவி தவளாதேவி தேவி உபாசனை செய்பவள். தான் என்றென்றும் சுமங்கலியாக இருக்க அருள வேண்டுமென அவள் தேவியை வேண்டி வரமும் பெற்றவள். அவள் தன் கணவனிடம் தன் வரம் பற்றிக் கூறி இனிமேல் பார்வதிக்கு இடைஞ்சல் செய்ய அவன் போகக் கூடாது என் அறிவுரை கூறினாள்.

திரிபுராசுரர்களைக் கொன்ற சிவன் பார்வதியைக் காண வேகவேகமாகக் கைலாசத்திற்கு வந்தார். ஆனால் வாசலில் நின்ற பிள்ளையார் அவரைத் தடுத்து நிறுத்திவிட்டார். சிவனோ, ''யார் நீ?'' என்று கேட்க, பிள்ளையாரும் ''அம்மாவின் பிள்ளை நான். இங்கு யார் யாரோ என்னென்னவோ உருவில் வருகிறார்கள். அதனால் யாரையும் உள்ளே போகவிடாமல் நான் காவல் புரிகிறேன்,'' என்றார்.

சிவனோ, ''சிறுவா! என்னை யார் என்று எண்ணினாய்? நான் பரமேசுவரன்!'' என்று கூறினார். பிள்ளையாரோ ''நீங்கள் இவ்வளவு பெரியவராக இருந்தும் இன்னமும் ஒன்றும் தெரியாதவர் போல இருக்கிறீர்களே. எனக்குத் தெரிந்ததை நான் கூறுகிறேன். சற்று அமைதியுடன் கேளுங்கள்'' எனக் கூறி விவரமாகச் சொல்லலானார்.

ஆதிசக்தி தன் சிவப்பு, நீல,



வெள்ளை நிறச் சுவாலைகளால் பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மூவரைப் படைத்தாள். பிரம்மாவும் விஷ்ணுவும் தேவி கூறியதை எதுவும் கேட்டுக் கொள்ளாமல் போக, தேவி அவர்களைத் தன் மூன்றாவது கண்ணால் பார்த்து சுட்டு எரித்தாள். சிவனோ அவள் கூறுவது போலச் செய்வதாயும், முதலில் தனக்கு அவளது மூன்றாவது கண்ணைக் கொடுக்க வேண்டும் என்று கேட்டார். தேவியும் தனது மூன்றாவது கண்ணை எடுத்து சிவனின் நெற்றியின் நடுவே வைத்தாள். உடனே சிவனார் அந்த கண்ணைத் திறந்து சக்தியைப் பார்க்க அவள் எரிந்து சாம்பலாகி நாலா புறமும் பறந்தாள். இப்படியாக உலகம் ஏற்பட்டது. அதன்பின் தேவிக்கு முந்தைய உருவம் வந்தது. இதனால் தான் அவளை 'மகாமாயா' எனவும் அழைக்கிறார்கள். அவள் சிவனைப் பாராட்டி பிரம்மாவையும் விஷ்ணுவையும் அவர்களது சாம்பல்களிலிருந்து உயிர் பெற்று வரச் செய்தாள். மீதமான சாம்பலை அவள் மூன்று கூறுகளாக்கி அவற்றிலிருந்து சரஸ்வதி, லட்சுமி, உமா ஆகியவர்களை வரச் செய்தாள். பிரம்மாவுக்கு சரஸ்வதியையும், விஷ்ணுவிற்கு லட்சுமியையும், சிவனுக்கு உமாவையும் மனைவியாக்கிவிட்டு சக்தி மறைந்து போனாள்.

இவ்வாறு பிள்ளையார் கூறியதும் சிவனார், ''பார்க்க சிறு பயலாக

இருக்கிறாய். என்ன பேச்சு பேசுகிறாய்? நான் ஒன்றும் செய்ய மாட்டேன், பயப்படாதே! என்னை உள்ளே போகவிடு!'' என்றார். பிள்ளையாரோ ''அதுதான் முடியாது. என் உடலில் உயிர் உள்ளவரை நான் யாரையும் உள்ளே போகவிடமாட்டேன்'' என்றார். சிவனுக்கும் கோபம் வந்துவிட்டது.

சிவகணங்களை அழைத்து அச்சிறுவனை அங்கிருந்து இழுத்துச் செல்லும்படி அவர் கூறினார். அப்போது பிள்ளையார் சிரித்து ''என்னைப் பார்த்து சற்றுமுன் சிறு பயல் என்றீர்கள். ஒரு சிறு பயலுக்கு இவ்வளவு கடுந்தண்டனையா? இது சரியா?'' என்று கேட்டார்.

சிவன் அவரை முறைத்துப் பார்க்கவே பிள்ளையாரும் ''சரி, நான் கணங்களின் அதிபதியான கணபதி. என்னை எதிர்க்க வரலாம்,'' என்றார்.

மறுநிமிடம் நந்தி, சிருங்கி, பிருங்கி முதலானோர் பிள்ளையாரை நோக்கிப் பாய்ந்து வந்தார்கள். அவரோ தம்மிடம் இருந்த அங்குசத்தாலும், கதையாலும், சூலத்தாலும் பாசத்தாலும் அடித்து அவர்களை விரட்டினார். அங்கு ஒருவர் கூட நிற்கவில்லை. ஓடிவிட்டார்கள்.

சிவன் கோபமடைந்து தன் திரிசூலத்தை எடுத்து வீசினார். பிள்ளையாரின் அங்குசம் அதனை எதிர்த்துக் கீழே விழும்படிச் செய்தது.

பிள்ளையார் ''என் அன்னை கொடுத்த இந்த ஆயுதம் உள்ளவரை என்னை எதுவும் செய்ய முடியாது. நீங்களோ எனக்குத் தீங்கு விளைவிக்க நினைப்பதால் இதனைத் தூர எறிந்துவிடுகிறேன். அதன்பின் உங்கள் இஷ்டம் போலச் செய்யுங்கள்'' எனக் கூறி அங்குசத்தைத் தூரப் போட்டார்.

சிவன் கோபத்தோடு தன் சூலத்தால் பிள்ளையாரின் தலையை வெட்ட, அவர் 'அம்மா' எனக் குரல் கொடுத்தவாறே கீழே விழுந்துவிட்டார். அவரது தலை உயரக் கிளம்பி ஒளியை வீசி மாயமாய் மறைந்துவிட்டது.

*(தொடரும்)*





# பலித்தது ஆரூடம்!

ராஜகிரி மன்னன் ராஜசேனன். எப்போதும் சிரித்த முகமாய் இருப்பவன். கவலைப்படாமல் வாழ வேண்டுமென நினைப்பவன். வாழ்கின்ற சிறிய காலத்துள் புதுமைகள் பலவற்றைக் காண வேண்டுமென்று எண்ணி வருபவன்.

ஒரு நாள் மன்னன் தன் பட்டத்து ராணியுடன் பூங்காவில் உலாவிக் கொண்டிருந்தான். அவன் ராணியிடம், ''தினமும் நாம் ஒரே விதமான மரங்களையும் செடிகளையும் மலர்களையும் மட்டுமே பார்த்து வருகிறோம். வேறு புதுமையாக எதுவும் தென்படுவது இல்லையே!'' என்றான். ராணியும் சிரித்தவாறே, ''நன்றாக இருக்கிறதே நீங்கள் கூறுவது! தினமும் உங்களுக்காகப் புதிதாக ஏதாவது ஒன்று முளைத்துக் கொண்டே இருக்குமா?'' என்று கேட்டாள். அப்போது மன்னன் ''சரி, சரி. உனக்குத் தெரியாவிட்டாலும் நான் நம் தோட்டக் காரனைக் கேட்கிறேன்'' எனக் கூறி, சற்று தூரத்திலிருந்த தோட்டக்காரனைக் கைதட்டிக் கூப்பிட்டான். அவனும் ஓடோடி வந்து மன்னனின் முன் கை கட்டிக் கொண்டு நின்றான். மன்னன் தன் கழுத்தில் அணிந்திருந்த முத்து மாலையை எடுத்து அவனிடம் கொடுத்தான்.

எதிர்பாராதவிதமாக விலை உயர்ந்த முத்து மாலை கிடைத்ததும் தோட்டக்காரன் அதனைத் தன் மடியில் வைத்துக் கட்டிக் கொண்டான். அப்போது மன்னன் அவனிடம், ''உனக்கு இந்த முத்துமாலை கிடைத்தது ஒரு புதுமையாகத் தோன்றவில்லையா?'' என்று கேட்டான். தோட்டக்காரனும் ''எனக்கு அப்படித் தோன்றவில்லை. ஏனெனில் எனக்கு இந்த முத்து மாலை தங்களிடமிருந்து இரண்டொரு தினங்களில் கிடைக்கும் என்று என்

– கா. குருசாமி –



ஊருக்குப் பக்கத்திலுள்ள ஆசிரமத்தில் இருக்கும் ஒரு யோகீஸ்வரர் கூறினார். அதனால் நீங்கள் மாலையைக் கொடுத்தபோது அது புதுமையாகவோ அல்லது ஆச்சரியப்படுதாகவோ எனக்குப் படவே இல்லை'' என்றான்.

அதைக் கேட்டுக் கொண்டிருந்த ராணி தோட்டக்காரனிடம், ''அந்த யோகீஸ்வரர் அப்படியா ஆரூடம் கூறினார். மிகவும் சக்திவாய்ந்தவர் போலிருக்கிறதே!'' என்று கூறிவிட்டு மன்னனிடம் ''நாம் அவர் இருக்கும் இடத்திற்குப் போய் அவரை தரிசித்து நம் எதிர்காலம் பற்றிக் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்'' என்றாள். அப்போது தோட்டக்காரன் ''ராணி அவர்களே! அந்த யோகீஸ்வரர் பெண்களைப் பார்க்க மாட்டார். அதனால் மன்னர் மட்டும் சென்று வரட்டும்'' என்றான். அதைக் கேட்ட ராணி, ''யோகீஸ்வரர்களின் செயல்களே விசித்திரமாகத் தான் உள்ளன. சரி, நீ கூறியபடி மன்னரே போய் அவரைத் தரிசித்துவிட்டு வரட்டும்'' என்றாள்.

மன்னனும் அரைமனதுடன் அவரைக் காணப் புறப்பட்டுச் சென்றான். யோகீஸ்வரரைத் தரிசித்து விட்டு வந்த அவன் யாரிடமும் பேசாமல் தன் அறைக்குச் சென்று விட்டான். மூன்று நாட்கள் கழிந்தும் அவன் யாரிடமும் பேசவில்லை. உணவும் உட்கொள்ளவில்லை. அதனால் அவனது உடம்பு இளைத்துப் போயிற்று.

ராணி அவனிடம், ''ஏன் எதுவும் பேசாமல் இருக்கிறீர்கள்? யோகீஸ்வரர் என்ன சொன்னார்? இப்படி எதுவுமே பேசாமல், உணவும் உண்ணாமல் இருந்தால் நானும் உணவு உண்ணமால் உயிரைப் போக்கிக் கொண்டு விடுவேன்'' என்றாள். அப்போது மன்னன் ''அந்த யோகீஸ்வரர் என் எதிர்காலம் பற்றி என்ன சொன்னார் தெரியுமா? அவர் என் காலணிகளைப் பார்த்தவாறே 'நீ அணிந்திருக்கும் இவற்றை விரைவில் இழந்து பரிதாப நிலையை அடைவாய். காலணிகள் வேண்டுமென்று யாரோ ஒருவனிடம் கேட்டு அவற்றை அவனிடமிருந்து வாங்கி அணிந்து கொள்வாய். மகுடத்தை இழந்து விட்ட உனக்கு மலை வாசி ஒருவன் அதை உன் தலையில் வைப்பான்' என்றார். இந்த ஆருடத்தால் என்ன தெரிகிறது? நம் நாட்டை யாரோ ஒரு மன்னன் தாக்கி

என்னை விரட்டப் போகிறான் என்றும், நான் அவனோடு போர் புரிந்து தோற்று ஓடுவேன் என்றும், அப்போது என் காலணி களையும் மகுடத்தையும்கூட இழந்து தலை தெறிக்க ஓடிவிடுவேன் என்று நன்கு புரிகிறதே. யாரிடமோ காலணி களைக் கேட்டு வாங்கி அணியும் நிலைக்கும் தொலைந்து போன என் தலையிலிருந்த மகுடத்தை தேடி எடுத்துவந்து என் தலையில் அணி விக்கும் நிலைக்குமா போவேன்! இது கொடுமையிலும் கொடுமை அல் லவா?'' என்றான்.

ராணியும் ''இதற்கெல்லாம் பரி காரங்கள் இருக்கும். ஹோமங்கள், பூஜைகள் என்றெல்லாம் செய்யச் சொல்வார்கள். எனவே நீங்கள் மறுபடியும் யோகீஸ்வரரைக் கண்டு வாருங்கள்'' எனக்கூறி அவனை யோகீஸ்வரரின் ஆசிரமத்திற்கு அனுப்பினாள். மன்னனும் தன் தேரில் அமர, தேரோட்டி அதனை ஓட்டலானான்.

தேர் காட்டு வழியில் போய்க் கொண்டிருந்தது. அப்போது ஒரு புலி மானைத் துரத்தியவாறே குறுக்கே வந்தது. புலியைக் கண்டு தேரில் பூட்டப்பட்ட குதிரை மிரண்டு தேரை ஒரு பக்கமாகச் சாய்த்தது. அங்கு சேறும் சகதியுமுள்ள குட்டை நீரில் மன்னன் விழுந்தான். தேரோட்டி சட் டெனக் குதித்ததால் அந்தக் குட்டைக் குள் விழவில்லை. மன்னன் சிரமப் பட்டு அந்தக் குட்டையிலிருந்து பாதைக்கு வந்தான். அவனது காலணி கள் குட்டையின் சேற்றினுள் அமுங் கிப் போயின. அவனது மகுடம் வேறு எங்கோ விழுந்தது.

மன்னன் தன்னால் காலணிகள்



இல்லாமல் நடக்க முடியாது என்று தேரோட்டியிடம் அவனது காலணி களைக் கொடுக்கும்படிக் கேட்டான். தேரோட்டியும் தான் அணிந்திருந்த காலணிகளைக் கழற்றி மன்னனிடம் கொடுத்தான். அவன் அதை அணிந்து கொண்டிருக்கையில் ஒரு மலைவாசி ஓடோடி வந்தான். அவனது கையில் மன்னனின் மகுடம் இருந்தது. அவன் மன்னனை வணங்கி, ''அரசே! இந்த மகுடம் இங்கிருந்து சற்று தூரத்தில் கிடந்தது. இது தங்களுடையது எனத் தெரிந்து கொண்டேன். அதனால் இதை எடுத்து வந்தேன். இதனை நானே என் கையால் தங்கள் தலையில் வைக்கிறேன்,'' எனக்கூறி அதனை மன்னனின் தலையில் வைத்தான்.

இதற்குள் தேரோட்டியும் மிரண்ட குதிரையைப் பிடித்துவர, சற்று நேரத்தில் தேர் புறப்படத் தயாராகிவிட்டது. மன்னனிடம் அவன், ''இனி ஆசிரமத்திற்குப் போகலாமா?'' என்று கேட்டான். மன்னனோ, ''வேண்டாம். நாம் திரும்பி அரண்மனைக்கே போய் விடலாம்'' என்றான். சற்று நேரத்தில் தேர் அரண்மனையை அடைந்தது. மன்னன் தேரிலிருந்து இறங்கி அரண் மனைக்குள் சென்றான். அவனைக் கண்ட ராணி, ''இதென்ன அலங்கோலம்? ஆடைகளில் சேறு படிந் திருக்கிறதே. என்ன நடந்தது?'' என்று கவலைப் பட்டவாறே கேட்டாள்.

மன்னனும் வழியில் நடந்ததைக் கூறி, ''யோகீஸ்வரர் கூறிய ஆரூடத்தை நாம் தவறாகப் பொருள் படுத்தி வீணாகக் கவலைப்பட்டோம். அவர் கூறிய ஆரூடப்படி குட்டையில் என் காலணிகளை இழந்த நிலையில் தேரோட்டியிடம் அவனது காலணிகளைக் கொடுக்கும்படிக் கேட்டு வாங்கிக் அணிந்து கொண்டேன். தேரிலிருந்து விழுந்தபோது என் மகுடம் பாதையோரமாக விழுந்திருக்கிறது. அதை ஒரு மலைவாசி எடுத்து வந்து என் தலையில் வைத்தான். இவ்வளவு எளிதான விஷயத்தை நாம் எப்படியெப்படியோ கற்பனை செய்துவிட்டோமே!'' என்று கூறிச் சிரித்தான்.





# கைநாட்டு கற்பித்தான்!

ரங்கசாமி ஆசிரியராக முப்பத்தைந்து ஆண்டுகள் பணிபுரிந்து அன்று ஓய்வு பெற்றார். அன்று அவருக்குப் பிரிவுபசாரம் செய்ய ஒரு கூட்டம் கூட்டப்பட்டது.

ஊர்ப் பிரமுகர்களும் சகஊழியர்களும் அவரைப் பாராட்டிப் பேசி மாலைகள் அணிவித்து, பொன்னாடை போர்த்தி விடை கொடுத்து அனுப்பினார்கள். அவரும் பூரித்துப் போய் தமக்கு அணிவித்த மாலைகளையும் பொன்னாடையையும் எடுத்துக் கொண்டு தம் வீட்டிற்குச் சென்றார்.

அவர் தம் மனைவியிடம், ''பார்! எனக்கு எவ்வளவு மரியாதை கிடைத்திருக்கிறது! பிரிவுபசாரக் கூட்டத்தில் பேசியவர்களெல்லாம் என் அறிவைப் பாராட்டினார்கள். நான் செய்த பணி மகத்தானது என்று புகழ்ந்தார்கள். இதற்கு என்ன காரணம் என்று உன்னால் சொல்ல முடியுமா?'' என்று கேட்டார். அவரது மனைவியும் ''உங்களைப் பாராட்டிப் பேசியவர்கள் உங்களிடம் படித்த மாணவர்களாகத் தான் இருந்திருக்க வேண்டும்,'' என்றாள்.

ரங்கசாமியும் ''அதில்லை. வேறு ஏதோ காரணம் இருக்கிறது,'' என்றார்.

வேலையிலிருந்து ஓய்வு பெற்றபின் அவர் நகரில் இருப்பதால் செலவு அதிகமாவதைக்கண்டு தன் கிராமத்திற்கே போய்விடத் தீர்மானித்தார். அதன்படி அங்கே சென்றபின் எப்போது பார்த்தாலும் ஏதாவது ஒரு புத்தகத்தை எடுத்துப் படித்துக் கொண்டே இருந்தார்.

இதைப் பார்த்த அவரது மனைவி மீனாட்சி ஒருநாள் அவரிடம், ''நீங்கள் இப்படிப் படித்துக் கொண்டு உங்கள் அறிவை அதிகரித்துக் கொண்டே போகிறீர்களே! இதனால் யாருக்கு என்ன பயன்? உங்களுக்குக் கூட பயன் இல்லையே. இந்த ஊரில்

– சோபினி சுவாமி –



எழுதப் படிக்கத் தெரியாதவர்கள் பலர் இருக்கிறார்கள். அவர்களுக்குப் படிக்கவும் எழுதவும் கற்றுக் கொடுங்கள், ஒரு புண்ணிய காரியம் செய்தது போல இருக்கும்,'' என்றாள்.

ரங்கசாமிக்கும் தன் மனைவி கூறிய யோசனை சரியென்றே பட்டது. அதனால் அவ்வூரில் உள்ள வயதிற்கு வந்தவர்களிடம், ''நான் விஜயதசமி அன்று இரவுப்பள்ளி நடத்தப் போகிறேன். என்னிடம் கல்வி கற்கக் கட்டணம் எதுவும் கொடுக்க வேண்டாம். உங்களை எழுதப் படிக்க வைப்பது தான் என் நோக்கம்'' என்று கூறினார். தான் வயது வந்தவர்கள் எல்லோரையும் கண்டு சொல்லி விட்டதால் அவர்கள் எல்லோரும் விஜயதசமி அன்று படிக்க வந்து விடுவார்களென நம்பினார்.

விஜயதசமி வந்தது. அன்றிரவில் முதல் வகுப்பை நடத்த ரங்கசாமி பல புத்தகங்களை எடுத்துக் கொண்டு கம்பீரமாக வகுப்பை நடத்தும் இடத்திற்குச் சென்றார்.

ஆனால் யாருமே வரவில்லை. அவர் ஏமாற்றமடைந்து யாராவது வருகிறாரா என்று பார்த்தார். பண்ணையார் பரமசிவத்திடம் வேலை செய்யும் பழனி வந்து அவர் முன் உட்கார்ந்தான். வேறு யாரும் வரவில்லை.

அப்போது அவர் பழனியைப் பார்த்து, ''வந்திருப்பதே நீ ஒருவன் தான். உனக்கு என்ன சொல்லிக் கொடுப்பது. நான் போகிறேன்'' என்று கிளம்பினார்.

ஆனால் பழனி அவரைப் போக விடாமல் தடுத்து, ''நான் தீவனம் வைக்கக் கொட்டிலுக்குப் போன போது நான்கு எருமைகள் எங்கோ

போய்விட்டன. ஆனால் ஓர் எருமைக் கன்றுக்குட்டி மட்டும் இருந்தது. அதனால் நான் ஒன்றும் செய்யாமல் இங்கே வந்துவிடவில்லை. அந்தக் கன்றுக்குட்டிக்குத் தீவனம் வைத்து விட்டுத்தான் வந்தேன்,'' என்றான்.

அதைக் கேட்ட ரங்கசாமி பழனி குறிப்பால் உணர்த்தியதைப் புரிந்து கொண்டு அவனுக்கு சிரத்தையுடன் பாடத்தைச் சொல்லி எழுதக் கற்றுத் தந்தார். பிறகு திருப்தி அடைந்தவராய் பழனியை அனுப்பி அவர் தன் வீட் டிற்கு வந்து சேர்ந்தார்.

மறுநாள் இரவு அவர் பாடம் நடத்தும் இடத்தை அடைந்தபோது பழனிகூட வராததைக் கண்டார். அதனால் அவர் போய் தூங்கிக் கொண்டிருந்த பழனியைத் தட்டி யெழுப்பி, ''அடே! உனக்கு படிக்க ஆசை ஒரு நாள் தானா? நேற்று என்னவோ மற்ற மாடுகள் இல்லாது போனாலும் இருந்த ஒரே கன்றுக் குட்டிக்குத் தீவனம் வைத்ததாகக் கதை அளந்து படிப்பில் அக்கறை கொண்டவன் போலக் காட்டிக் கொண்டாயே. இன்று ஏன் வர வில்லை?'' என்று கோபத்தோடு கேட்டார்.

பழனியோ மிகவும் பணிவுடன் அவரை வணங்கி, ''ஐயா! நான் கன்றுக்குட்டிக்கு அதற்கு வேண்டிய தீவனம் தான் கொடுத்தேன். நான் எருமைகளுக்கு வைக்கும் தீவனத் தையும் அதற்குக் கொடுத்து உண்ண வைக்கவில்லையே!'' என்றான்.

அப்போது தான் அவருக்கு தான் மாணவர்களுக்குக் கற்பிப்பது அவர் கள் புரிந்து கொள்ளும் அளவிற்கு இராமல், மிகமிக உயர்நிலை மாணவர்களுக்குக் கற்பிப்பது போல இருப்பது புரிந்தது.

அவர் தாம் செய்து வந்த தவறை உணர்ந்தார். அப்போதே அவர் தன் னைத் திருத்திக் கொண்டு மாண வர்கள் புரிந்து கொள்ளும் விதத்தில் பாடங்களைக் கற்பிக்கவே, அவ்வூர் முதியோர் அவரிடம் எழுதப் படிக்கக் கற்றுக் கொண்டார்கள்.





# அகந்தை ஏன்?

புங்கனூரில் புருஷோத்தமர் என்ற மாபெரும் பண்டிதர் இருந்தார். அவருக்கு அவ்வூரில் மட்டுமல்லாமல் சுற்றுப் பக்கத்து எல்லா ஊர்களிலும் நல்ல மதிப்பும் பெயரும் இருந்தது. அவரைக் கண்டு இலக்கியத்தில் தம் ஐயங்களைப் போக்கிக் கொள்ள பல அறிஞர்கள் வந்து போய்க் கொண்டு இருந்தார்கள்.

புருஷோத்தமரின் மகள் புஷ்பமாலா. அவளும் தன் தந்தையைப் போலவே கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கினாள். ஆனால் அவளிடம் அவளது தந்தையிடம் இருக்கும் தன்னடக்கம் இருக்கவில்லை. தான் மெத்தப் படித்தவள் என்ற அகந்தை தலைதூக்கி நின்றது.

புருஷோத்தமருக்குத் தன் மகளின் இந்தப் போக்கு பிடிக்கவில்லை. ஆனால் சிறு வயது முதலே பண்டிதர் தம் மகளைக் கண்டிக்காமல் பண்டிதர்களுடன் வாதம் புரிய அனுமதித்ததால் அவளது அகந்தை நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே போயிற்று. வயதிலும் அறிவிலும் அனுபவத்திலும் தன்னை விடப் பெரியவர்கள் என்பதை எல்லாம் கருத்தில் கொள்ளாமல் கர்வ மேலீட்டால் அவள் அவர்களை மட்டம் தட்டி வந்தாள்.

அவர் மகளிடம், ''மகளே! நீயாகப் போய், பெரியவர்கள் ஒரு விஷயம் பற்றிச் சர்ச்சை நடத்துகையில் நடுவில் புகுந்து பேசும் வழக்கத்தை விட்டுவிடு. இதனால் உனக்கும் நல்லது. மற்றவர்களுக்கும் தொல்லை இராது'' என்றார். ஆனால் புஷ்பமாலாவோ, ''பண்டிதர்கள் இடையே பெரியவர்கள், சிறியவர்கள் என்றோ வயதானவர், வயதில் குறைந்தவர் என்றோ பார்க்கக் கூடாது. அவர்களது அறிவு எத்தகையது என்று பார்க்க வேண்டும்'' எனக் கூறினாள். தனக்கு மற்றவர்களைவிட அறிவு அதிகம் என எண்ணி அவள்

– கௌரிநாதன் –

இறுமாப்பு கொள்கிறாளே என்று நினைத்து அவர் மனம் வருந்தினார்.

அவ்வூரில் உள்ள சில பண்டிதர் களிடம் அவளை எப்படித் திருத்து வது என்று யோசனை கேட்டார். அவர்களும், ''கவலைப்படாதீர்கள். ஏதாவது வழி பிறக்கும்'' என அவ ருக்கு ஆறுதல் கூறினார்கள்.

இச்சமயத்தில் நவராத்திரியின் போது பண்டிதர்களின் சபைக்குத் தலைமை தாங்குமாறு அந்நாட்டு மன் னனிடமிருந்து புருஷோத்தமருக்கு அழைப்பு வந்தது. தலைநகரில் பத்து நாட்கள் அவர் இருக்க வேண்டியதால் அவர் தம் மகளிடம், ''நம் வீட்டிற்கு நான் இல்லாதபோது பண்டிதர்கள் வந்தால் அவர்களை நன்கு உபசரி. அலட்சிப்படுத்தாதே!'' என்று கூறி விட்டுத் தலைநகருக்குச் சென்றார்.

புருஷோத்தமர் கிளம்பிச் சென்ற பின் மறுநாள் அவ்வூர்ப் பண்டிதர்கள் அவரது வீட்டுத் திண்ணையில் உட் கார்ந்து, ''அடடா! புருஷோத்தமர் இப்போது இல்லாமல் போய் விட்டாரே. இவ்வூர் கோயில் மதில் சுவரில் ஒரு கல்லில் ஏதோ எழுத்து கள் உள்ளனவாம். அதைப் படிக்க முடியாமல் எல்லோரும் திகைக் கிறார்களாம். புருஷோத்தமர் இருந் தால் அதைப் படித்து என்ன விஷயம் என்று சொல்லிவிடுவாரே!'' என்று புஷ்பமாலாவின் காதில் விழும்படி உரக்கக் கூறினார்கள்.

அதைக் கேட்ட புஷ்பமாலா, ''அதைப் படிக்க என் தந்தையால் தான் முடியும் என்று நினைக்கிறீர் களா? என்னால் எதையும் படிக்க முடியும், வாருங்கள். நாம் அங்கு



போவோம்,'' என்றாள். அவர்கள் பின்னால் ஊராரும் வேடிக்கை பார்க்கச் சென்றனர்.

கோயில் சுவரில் ஓரிடத்தில் ஒரு பகுதியைக் காட்டி அதைப் படித்து விளக்கும்படி புஷ்பமாலாவிடம் கூறினர். அவளும் சற்றும் தயங்காமல் 'மளமள'வென்று படிக்கலானாள். ''செயல் வீரர்கள் தாம் இதனை மேற்கொண்டு படிக்க வேண்டும். இக்கோயிலின் குளத்தில் பத்தடி சேறு படிந்துள்ளது. நான் இப்போதே இக்குளத்தில் மண்வெட்டியுடனும், கூடையுடனும் இறங்கி நான் மட்டுமே வேலை செய்து இக்குளத்திலுள்ள சேறு முழுவதையும் எடுத்து வெளியேற்றுவேன். இதற்கு நீங்கள் எல்லோருமே சாட்சி.''

இதனை புஷ்பமாலா யாவரும் கேட்க உரக்கப் படித்தாள். உடனே ஒருவன் ஒரு மண்வெட்டியையும் கூடையையும் எடுத்து வந்து அவளிடம் கொடுத்தான். அப்போது அவள் ''நான் இதைப் படிப்பதற்காகத் தான் சொன்னேனே ஒழிய சேற்றை அள்ளி வெளியே போடுவதாகக் ஒப்புக் கொள்ளவில்லையே!'' என்றாள் அலட்சியமாக.

அப்போது அவன் ''நாங்களெல்லாம் படிக்கத் தெரியாத முட்டாள்கள் என்றா நீ நினைத்துவிட்டாய்? இதைப் படிப்பவன் இதில் கூறப்பட்ட வேலையைச் செய்தாக வேண்டும். அதைத் தான் எல்லோரையும் சாட்சிகளாக வைத்துக் கூறினாய். அதனால் அந்த வேலையைச் செய்து முடி!'' என்றான். அப்போது தான் அவள் தான் முன்பின் யோசிக்காமல் அவசரப்பட்டு அதைப் படித்து விட்டதை உணர்ந்தாள்.

அப்போது ஒரு பண்டிதர், ''புஷ்பமாலா! உனக்கு அறிவு இருக்கலாம். அதை எப்படிப் பயன்படுத்த வேண்டும் என்பதை யோசித்துச் செயல்பட வேண்டும். அகந்தை கொண்டு அவசரப்பட்டால் இந்த நிலையைத் தான் யாரும் அடைவார்கள்'' என்றார். புஷ்பமாலா வெட்கித் தலை குனிந்தாள். அப்போது முதல் அவள் கர்வம் கொண்டு பேசவில்லை.





அம்புலிமாமாவின்
அன்பளிப்பு
வீர தீர பராக்கிரமன்
12
ஓவியம் : பாணி
மன்னனின் உயிருக்கு ஆபத்து வராதிருக்க அவனை ஆதித்தன் பத்திரமாய் ஓரிடத்தில் மறைந்திருக்கச் செய்துவிட்டு மாறுவேடத்தில் தலைநகருக்கு வந்தான். நரேந்திரதேவனும் அவனது மகனும் அவனை அடையாளம் கண்டு கொண்டுவிட்டார்கள். மன்னன் இருக்கும் இடத்தை அறிந்து கொள்ள நரேந்திரதேவன் ஒரு மந்திரவாதியை வரவழைத்தான். மன்னன் ஒரு நீர்வீழ்ச்சியின் அருகே இருப்பதாயும், அவனுக்குக் காவலாக ஒரு கருடப் பட்சி இருப்பதாக அவன் கூறினான்.




மந்திரவாதி கருடன் எனக் கூறியது கேட்டு நரேந்திரதேவன் மலைத்துப் போனான்.




கருடன் பூதமா? பிசாசா?
இருக்கலாம். அதற்கு நன்கு பயிற்சி அளிக்கப் பட்டுள்ளது. அதைப் பற்றி மேலும் அறிய என் குருநாதரைத் தான் அணுக வேண்டும்.




அவர் கொடிய விஷமுள்ள நாகப் பாம்புகளிடையே வாழ்ந்து வருகிறார். அவரது பெயர் நாகபந்து. அவர் மலையடிவாரத்திற்கு ஆவணி மாதத்தில் ஒரேயொரு முறை வந்து தன் சீடர்களுக்கு தரிசனம் அளிப்பார்.






நரேந்திரதேவன் மலைப் பகுதிக்குச் சென்றபின் அரண் மனையில்...
அதென்ன சத்தம்? தந்தையின் படம் ஏன் இப்படி அங்குமிங்குமாக ஊசலாடுகிறது?
படத்தின் பின் இருந்த பேழையை ஆதித்தன் எடுத்துக் கொண்டான்.


அதிலிருந்த இறகு மெதுவாக உயரச் செல்லவே, ஆதித்தன் கருடனின் உருவை அடைந்தான்.


ரவீந்திரன் காவல் வீரர்களுடன் ஆதித்தனின் படுக்கை அறையை அடைந்தான்.
இம்முறை அவன் தப்ப முடியாது. சிறைப் படுவான்.


படுக்கையறைக் கதவு திடீரெனத் தானே திறந்து கொண்டது. வந்தவர்களுக்கு பலமான அடிகள் விழவே அவர்கள் ஓடிப் போயினர்.
ஆ! என்ன விசித்திரம்!! ஒரே ஒளிமயம். கண் கூசுகிறதே! எதுவுமே தெரியவில்லையே!


சற்று நேரத்திற்குப் பின் அரண் மனையில்...
பிரபுவே! முதல் அமைச்சர் அவரது அறையில் இல்லை.
எப்படித் தப்பிப் போயிருப்பான்?
நீங்கள் சரியாகத் தேட வில்லை. எல் லோரும் உதவாக் கரைகளே!
அவர் இங்கி ருந்து வெளியே போகவே இல்லை. இதை எங்களால் உறுதியாகக் கூற முடியும்.


பிரபுவே! எங்கள் உடலெல்லாம் காயங்கள். ஒரு பருந்து தன் நகங்களால் கிறியது போலுள்ளது. ரத்தம் வடிகிறது.
இழப்பு களைப் பற்றிப் பேசாமல் வாயை மூடிக் கொண்டு இரு.
ஆகா! இந்த நறுமணம் எங்கிருந்து வருகிறது?


ஆதித்தா! நீ இங்கேயா இருக் கிறாய்?

(தொடரும்)

## Statement about Ownership of CHANDAMAMA (Tamil)

Rule 8 (FormVI), Newspaper (Central) Rules, 1956

| | |
|---|---|
| 1. Place of Publication | 82 Defence Officers Colony<br>Ekkatuthangal<br>Chennai-600 097 |
| 2. Periodicity of Publication | MONTHLY<br>1st of each calendar month |
| 3. Printer's Name<br>Nationality<br>Address | B. VISWANATHA REDDI<br>INDIAN<br>82 Defence Officers Colony<br>Ekkatuthangal<br>Chennai-600 097 |
| 4. Publisher's Name<br>Nationality<br>Address | B. VISWANATHA REDDI<br>INDIAN<br>82 Defence Officers Colony<br>Ekkatuthangal<br>Chennai-600 097 |
| 5. Editor's Name<br><br>Nationality<br>Address | B. VISWANATHA REDDI<br>(Viswam)<br>INDIAN<br>82 Defence Officers Colony<br>Ekkatuthangal<br>Chennai-600 097 |
| 6. Name and Address of individuals who own the paper | Chandamama India Ltd.<br>Board of Directors:<br>1. P. Sudhir Rao<br>2. Vinod Sethi<br>3. B. Viswanatha Reddi<br>82 Defence Officers Colony<br>Ekkatuthangal<br>Chennai-600 097 |

*I,* **B. Viswanatha Reddi,** *do hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.*

1st March 2002

B. VISWANATHA REDDI
*Publisher*




# போட்டோ வாக்கியப் போட்டி





**இந்த போட்டோக்களுக்கு ஒவ்வொரு சொல்லாலோ, அல்லது சிறு வாக்கியங்களாலோ தொடர்புடையதாக எழுதி அனுப்புங்கள்.**

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25ந் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/–

போட்டி முடிவு மே 2002 இதழில் வெளியிடப்படும்.

போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா,
எண்: 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி,
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

வாழ்த்துக்கள்

ஜனவரி 2002 இதழில் வெளியிடப்பட்ட
போட்டியில் வெற்றி பெற்றவர்:
**எஸ்.ஆர். அருண்**
c/o. ம. ரவி
70, கீழரத வீதி, சிவகிரி – 627 757,
திருநெல்வேலி மாவட்டம்.

பரிசு பெற்ற வாக்கியங்கள்





அன்பும் அமைதியும் எங்கே?
கொடிகட்டிப் பறக்குது இங்கே!

அம்புலிமாமா வருட சந்தா :

இந்தியாவில் ரூ.120/–

Payment in favour of CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 600 026 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : Viswam

